# தர்ம சக்கரம்



மாத சஞ்சிகை

| சக்கரம் 27 | பிங்கள ஞூ பங்குனி மீ | ஆரம் 3 |
|---|---|---|

பொருளடக்கம் பக்கம்



## அந்தர்யோக விவரங்கள்

புதுக்கோட்டை ஜில்லா—திருவரங்குளத்தில்

8&9—4—78 சனி, ஞாயிறு ஆகிய இரண்டு தினங்களில்

**இடம்:** திருவரங்குளம் வள்ளநாடு நகரத்தார் தவணை கட்டடம். **நேரம்:** விடியற்காலை 5-30 மணிமுதல் இரவு 9-30 மணிவரை வழக்கமான சாதனை முறைப்படி நடைபெறும்.

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**இதர விவரங்கள்:** உணவு, ஜாகை வசதிக்காக நபர் ஒன்றுக்கு ரூ. 10/-ஐ ஏப்ரல் மாதம் 6ஆம் தேதிக்குள் திரு. S. அருணாசல முதலியார், வடகாடு ரோடு, ஆவண்குடி போஸ்ட்-622 301, புதுக்கோட்டை மாவட்டம் என்ற விலாசத்திற்கு மணியார்டர் மூலமோ, நேரிலோ செலுத்திப் பெயர்களை பதிவுசெய்து கொள்ளவும். பணம் அனுப்பி கலந்துகொள்ள இயலாத அன்பர்களுக்குத் தொகை திருப்பித்தர இயலாது. தாய்மார்களுக்குத் தங்க தனி இடவசதி உண்டு. 7—4—78ல் மாலை 5-30 மணிக்குள் திருவரங்குளம் வந்துசேரவேண்டும். புதுக்கோட்டையிலிருந்து ஆலங்குடி செல்லும் வழியில் 5மைல் தொலைவில் திருவரங்குளம் உள்ளது. பன்னிரண்டு வயதிற்கு உட்பட்டவர்களும், அந்தர்யோக நடைமுறையைக் கடைப்பிடிக்க இயலாதவர்களும் அனுமதிக்கப்படமாட்டார்கள். 9—4—78 மாலை 5 மணிக்கு அந்தர்யோகம் முடிவு பெறும். தங்கள் சௌகரியத்திற்குத் தேவையான படுக்கை முதலியவற்றைத் தாங்களே கொண்டுவர வேண்டும்.

அந்தர்யோகத்தில் தபோவன வெளியீடுகள் விலைக்குக் கிடைக்கும்.

[ பின்பக்கம் பார்க்க ]

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**மதுரை ஜில்லா—உசிலம்பட்டியில் 19—3—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* நாடார் சரஸ்வதி உயர்நிலைப்பள்ளி

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-25 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**ராமநாதபுரம் ஜில்லா—பள்ளத்தூரில் 26—3—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஸ்ரீ சாரதா சேவாச்ரமம் சார்பில் சிவன் கோவில்

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி குஹானந்தர்

நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-25 செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**திருநெல்வேலி ஜில்லா—அம்பாசமுத்திரத்தில் 26—3—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி

*நேரம்:* காலை 9-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

**கோவை ஜில்லா—பவானியில் 2—4—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* பவானி-ஈரோடு மெயின் ரோட்டிலுள்ள ராஜாராம் அய்யர்-குட்டி செட்டியார் தோப்பு (காளிங்கராயன் வாய்க்கால் பாலத்திற்குத் தென்புறம்.)

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—தூத்துக்குடியில் 2—4—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* காரைப்பேட்டை நாடார் எலிமெண்டரி பாடசாலை

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

**மதுரை ஜில்லா—மேலூரில் 7—4—78 வெள்ளிக்கிழமை**

*இடம்:* சபரிமலை ஐயப்பசுவாமி பிரார்த்தனை மண்டபம்

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 16—4—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* விவேகானந்த கல்லூரி

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

*உணவு வசதி:* நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும் தாய்மார்களும் அந்தர் யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


| சக்கரம் 27 | பிங்கள ௵ பங்குனி ௴ | ஆரம் 3 |
| --- | --- | --- |


## பிரார்த்தனை

मयूराधिरूढं महावाक्यगूढं मनोहारिदेहं महच्चित्तगेहं ।
महादेवदेवं महावेद भावं महादेवबालं भजे लोकपालम् ॥ — शंकराचार्यः

மயூராதிரூடம் மஹாவாக்யகூடம்
மனோஹாரிதேஹம் மஹச்சித்தகேஹம் ।
மஹாதேவதேவம் மஹாவேதபாவம்
மஹாதேவபாலம் பஜே லோகபாலம் ॥

மயில்வாகனனுயிருந்து மகாவாக்கியத்தை விளக்குபவனை, அழகனுய் ஆன்ருேர் உள்ளத்தில் இருப்பவனை, பரமசிவனுக்குப் பிரணவத்தைப் போதித்தவனைச் சிவகுமாரனுயிருந்து உலகைக் காப்பவனை வணங்குகிறேன்.

ஏறுமயில் ஏறிவிளை யாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறும்அடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுக மானபொருள் நீ அருளல் வேண்டும்
ஆதியரு ணசலம் அமர்ந்தபெரு மாளே.

# அருள் விருந்து

பணிவு பகட்டை வெல்லுகிறது.

சமுதாயத்தை இணைத்துவைப்பது சத்தியம்.

சிரமப்படாத நன்னெறியில் சிறப்பு ஏதுமில்லை.

தன் குறையை அறிபவனுக்கு அதைத் திருத்துவது மிக எளிது.

சன்மார்க்கத்தில் சென்று வழிதவறிப்போனவன் உலகில் இல்லை.

மனச்சாட்சியைக் கடைப்பிடிப்பதும் கடவுளை நாடுவதும் ஒன்றே.

மனதைக் காலிபண்ணுபவன் அதனுள் பூரணத்தைக் காணுகிறான்.

யாண்டும் துயரத்தில் அழுந்திக்கிடப்பவன் எதையும் சாதிக்கமாட்டான்.

விபத்துக்களுக்கிடையில் ஒழுகுகிற நன்னெறியில் தெய்விகம் திகழுகிறது.

அன்பு உற்சாகத்தை ஊட்டுகிறது; அது யாரையும் உபத்திரவப்படுத்துவதில்லை.

மனச்சாட்சியை மலினப்படுத்தாது வைத்திருப்பதற்கு நிகரான மருந்து இல்லை.

வாழ்வு என்னும் போராட்டத்தில் பெரிய இலட்சியத்துக்காகப் போராடுபவன் புனிதவான் ஆகிறான்.

ஒவ்வொரு மனிதனுக்கும் அவனவன் கொள்கைக்கேற்ற வழிபாடு உண்டு; வழிபடாதவன் உலகில் இல்லை.

தன் சொந்த வீட்டில் அஹிம்சையைக் கடைப்பிடியாதவன் வேறு எங்குமே அதைக் கடைப்பிடிக்கப் போவதில்லை.

முறையாகச் செடியை நடுபவன் பிறகு அதைப் பெயர்த்தெடுப்பதில்லை. நேரான வாழ்க்கையும் அத்தகையதே.

பொருளற்றவைகளைக் குறித்து வீண்விவாதம் பண்ணுவது வீண்பொழுது போக்கு ஆகும். உள்ளத்தினுள் ஒளிந்துகொண்டிருக்கிற மனதை வெல்லுபவன் முக்தி பெறுகிறான்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

*சிந்தி பிரம்மசமாஜத்தில் பரமஹம்சதேவர் பக்தர்களோடு தொடர்ந்து சம்பாஷணை நடத்துகிறார்.*

“அன்னை பராசக்தியிடம் பக்தனொருவன் போராடித் தன் பக்தியைப் பெருக்குவதற்கு உரிமையுண்டு. குழந்தையொன்று எங்ஙனம் தனக்குத் தேவையானதைத் தாயோடு போராடிப் பெறுகிறதோ அங்ஙனம் பக்தனொருவன் அன்னை பராசக்தியோடு போராடித் தனக்குத் தேவையாயுள்ள பக்தியையும், ஞானத்தையும் பன்மடங்கு பெருக்கிக் கொள்ளலாம். சீக்கிய பக்தர்கள் சிலர் கொஞ்ச காலத்துக்கு முன்பு தக்ஷிணேசுவர ஆலயத்துக்கு வந்திருந்தார்கள். அம்பிகையின் சந்நிதியில் அமர்ந்து கொண்டு நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். ‘கடவுள் கருணாகரன்’ என்று அவர்கள் இயம்பினர். ‘அவரை ஏன் கருணாகரன் என வேண்டும்?’ என நான் கேட்டேன். அதற்கு அவர்கள் விடுத்த விடையாவது. ‘என் ஐயனே! அவர் நம் அனைவரையும் காப்பாற்றுகிறார்; நல்வழியில் நம்மை நடாத்துகிறார்; நமக்குத் தேவையாயுள்ள பொருளை வழங்குகிறார். வாழ்வுக்குரிய உணவையும் அவர் கொடுத்து உதவுகிறார்.’ இப்படியெல்லாம் இயம்பிய அவர்களுக்கு நான் எடுத்து உரைத்ததாவது, ‘மானுடனொருவனுக்குக் குழந்தைகள் சிலர் இருக்கின்றனரென்று வைத்துக்கொள்ளுவோம். அக்குழந்தைகளைப் பராமரிப்பதும் அவைகளுக்கு உணவு ஊட்டுவதும் யாருடைய கடமை? அவைகளின் சொந்தத் தந்தையா? அல்லது அக்கம்பக்கத்து கிராமத்திலுள்ள வேற்றான் ஒருவனா?’ கருணாகரனாக இருப்பதுதான் கடவுளின் பாங்கு. அதை நாம் பெருமைப்படுத்த வேண்டியதவசியமில்லை.”

*உபாத்தியாயாதிபதி:* “ஐயனே, அப்படியானால் கடவுளைக் கருணாகரன் என்று நாம் போற்றலாகாதா?”

*பரமஹம்சதேவர்:* “அப்படிப் போற்ற வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. நம் அனைவரையும் காப்பாற்ற அவர் கடமைப்பட்டிருக்கிறார் என்பதை மட்டும் நான் ஞாபகப்படுத்தினேன். கடவுள் நமக்கு முற்றிலும் சொந்தம். நாமனைவரும் முற்றிலும் அவருக்கு உரியவர் ஆகிறோம். ஆகையினால் உரிமையோடு வற்புறுத்தி நமக்குத் தேவையாயுள்ள மேன்மைகளையெல்லாம் நாம் அவரிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். நெருங்கிய சொந்தக்காரர்களிடம் நாம் வேண்டியவாறு உரிமை பாராட்டலாம். ‘அடே கொடுக்கின்றாயா இல்லையா?’ என்று உற்றான் ஒருவனிடம் போராடுவதற்கு நமக்கு உரிமையுண்டு. அதே விதத்தில் இறைவனுடன் போராடுவதற்கும் நமக்கு எல்லாவிதமான உரிமைகளும் உண்டு.

(உபாத்தியாயாதிபதியைப் பார்த்து) “உம்மிடம் நான் ஒன்று கேட்கிறேன். தற்பெருமையும் அகங்காரமும் எதினின்று உருவெடுக்கின்றன? ஞானத்தினின்றா? அல்லது அக்ஞானத்தினின்றா? அகங்காரம் தமோகுணத்தின் பாங்குடையதாயிருக்கிறது. அக்ஞானத்தினின்று அது உருவெடுக்கிறது. கடவுள் காட்சிக்கு இடைஞ்சலாயிருப்பது அகங்காரம். அகங்காரம் ஒழியும் பொழுது உபத்திரவங்கள் யாவும் அடிபட்டுப் போகின்றன. அகங்காரம் பிடித்திருப்பதில் பயன் ஏதுமில்லை. உடலும் உடைமைகளும் நிலைத்திருக்கமாட்டா. குடிகாரன் ஒருவன் ஒரு தடவை துர்க்காதேவியின் விக்ரகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் நன்கு அலங்கரிக்கப்பெற்றவளாக அந்த விக்ரஹத்தில் காட்சி கொடுத்தாள். அதைப் பார்த்து அவன் இயம்பியதாவது ‘தாயே, மிக நன்று. எவ்வளவு ஆடம்பரமாக வேண்டுமானாலும் நீ ஆடை ஆபரணங்கள் அணிந்துகொண்டு பகட்டுடன் இருக்கலாம். இரண்டு மூன்று தினங்களுக்குப் பிறகு உன்னை வழிபடுகின்றவர்களே உன்னை இழுத்துச் சென்று கங்கையில் போட்டு விடுவார்கள்.’ இதைக்கேட்டு எல்லாரும் நகைக்கின்றனர். புரட்டாசி மாதம் சுக்கிலபட்சம் சப்தமி, அஷ்டமி, நவமி ஆகிய மூன்று தினங்களில் வழி

பாட்டுக்காகத் துர்க்காதேவியின் விக்கிரஹம் ஆடம்பரமான அலங்காரத்துடன் ஆயத்தப் படுத்தப்படுகிறது. தசமியன்று அம்பிகையை விசர்ஜனம் செய்தான பிறகு அந்த விக்கிரஹம் கங்கையினுள் போடப்படுகிறது. இதைக் குறித்துத்தான் குடிகாரன் அங்ஙனம் பகர்ந்தான்.

“ஆகையினால் நான் உங்கள் எல்லார்க்கும் இயம்புவது ஒன்று உண்டு. நீவிர் நியாயாதிபதியாயிருக்கலாம். உம்மோடு இருப்பவர்கள் பெரிய பெரிய அந்தஸ்துகளில் இருக்கலாம். ஆயினும் இவையாவும் வெறும் இரண்டுநாள் பொம்மலாட்டங்களேயாம். ஆதலால் தற்பெருமையையும் ஆடம்பரத்தையும் நீங்கள் யாவரும் துறந்துவிடுதல் வேண்டும்.

தமோகுணத்தில் அழுந்திக்கிடக்கும் மக்களிடத்து அகங்காரம், உறக்கம், மீதூண்விருப்பம், காமம், வெகுளி ஆகிய சிற்றியல்புகள் முன்னணியில் நிற்கின்றன. யாரிடத்து ரஜோகுணம் ஆதிக்கம் செலுத்துகிறதோ அவர்களிடத்து ஆடம்பரமான நடவடிக்கைகளைக் காணலாம். பகட்டான உடைகள் பலவற்றை அவர்கள் உடைத்திருப்பார்கள். தங்களுடைய இல்லங்களை அவர்கள் கவர்ச்சிகரமாக அலங்கரித்திருப்பார்கள். வீட்டின் முகப்பு மண்டபங்களில் உள்ளத்தைக் கவரக்கூடிய படங்களை அவர்கள் மாட்டிவைப்பார்கள். கடவுள் வழிபாட்டில் ஈடுபடும்பொழுது அன்னவர்கள் சொகுசான பட்டாடைகளை அணிந்துகொள்வார்கள். அவர்கள் கழுத்தில் போட்டிருக்கும் ருத்ராட்ச மாலைகளில் இடையிடையே தங்கப் பூண்களையும் காணலாம். அவர்களுடைய பூஜாமண்டபங்களைப் பார்க்க வருபவர்களை அவர்கள் தாங்களே அழைத்துச் சென்று மண்டபத்திலுள்ள ஒவ்வொரு பகுதிக்கும் விளக்கம் கூறுவார்கள். ‘தயவு செய்து இவ் வழியில் வாருங்கள், நீங்கள் பார்ப்பதற்குரிய வேறு பொருள்கள் இருக்கின்றன. சலவைக் கல் திட்டப்பட்ட தரையைப் பாருங்கள். அதில் அமைந்துள்ள சித்திரங்களைக் கவனித்துப் பாருங்கள்’ என்று இயம்புவார்கள். ரஜோ குணம் பிடித்துள்ள மாந்தர் தானம் பண்ணும்பொழுது அதைப் பெருமிதமாக விளம்பரம் பண்ணுவார்கள். ஆனால் சத்வ குணத்தில் நிலைபெற்றிருக்கின்ற மாந்தருடைய பாங்கோ முற்றிலும் அமைதிகரமானது. எளிய உடைகளையே அவர்கள் யாண்டும் அணிந்திருப்பார்கள். தங்களுடைய உடல் வாழ்க்கைக்குத் தேவையாயிருக்கிற அளவுக்கே அவர்கள் பொருள் சம்பாதிப்பார்கள். ஏராளமாகச் செல்வத்தைத் திரட்டவேண்டும் என்னும் எண்ணம் அவர்கள் உள்ளத்தில் உதிப்பதில்லை. பணம் பிரித்தெடுத்தல் பொருட்டு மக்களை அவர்கள் முகஸ்துதி பண்ணமாட்டார்கள். வீட்டை அவர்கள் துப்புரவாக வைத்திருப்பார்கள். ஆனால் அதில் பகட்டு ஏதும் தென்படமாட்டாது. அவர்களுடைய குழந்தைகள் அணிந்திருக்கும் உடைகளைப் பார்த்தே பெற்றோர்களின் மனபரிபாகத்தைக் கண்டுகொள்ளலாம். தூய உடைகளைக் குழந்தைகள் நேர்த்தியாக அணிந்திருப்பார்கள். செல்வத்தின் விளம்பரம் எதையும் அவ்வுடைகளில் காண முடியாது. குழந்தைகளுக்கு ஆடம்பரமாக ஆடை அணிவிப்பது பகட்டுக்கு அறிகுறியாகும். ஏழை பணக்காரன் என்கின்ற வேற்றுமையும் அதினின்று வளருகிறது. ஆனால் சாத்விக இயல்பு படைத்திருக்கிறவர்கள் சுத்தமாக இருக்கும்படி தங்கள் குழந்தைகளுக்குப் பயிற்சிகொடுக்கிறார்கள். பணத்தினின்று வருகிற படாடோபத்திற்கு ஆங்கு இடமில்லை. சாத்விக இயல்பு படைத்திருக்கிறவர்கள் பேரும் புகழும் பெற விரும்புவதில்லை. அடக்கமாகப் பின்னணியில் இருப்பது அவர்களின் பாங்கு ஆகும். கடவுள் வழிபாட்டை வெளிப் பகட்டின்றி அவர்கள் நடாத்துகின்றனர். தியானம் பண்ணுவதை அவர்கள் விளம்பரப்படுத்துவதில்லை. அவர்கள் பண்ணுகிற தானம், பெறுகிறவர்களுடைய தேவைக்கேற்றவாறு அமைதியாக நடைபெறும். தங்களைக் கொடையாளிகள் என்று அவர்கள் வெளிக்குக் காட்டிக்கொள்வதில்லை. தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ளாது அமைதியாகவும், ஊக்கத்தோடும் அவர்கள் பெருநெறி கடைப்பிடித்து ஒழுகுகின்றனர். படிக்கட்டு ஒன்றின் மேற்பகுதிக்கு நிகரானது சத்துவகுணம். படிக்கட்டின் மேற்பகுதிக்கு வந்துவிட்டால் அடுத்தபடி அடையவேண்டிய இடம் மாடி ஆகும். அதே விதத்தில் சத்துவ

குணத்தில் நிலைத்திருப்பவர்கள் அடுத்தபடியாக அடைவது தெய்விகம் ஆகும். (உபநியாயாதிபதியைப் பார்த்து) மக்கள் எல்லாரும் ஒரேதரத்தில்தான் இருக்கிறார்கள் என்று தாம் பகர்ந்தீர்கள் அல்லவா? இப்பொழுது சற்று எண்ணிப் பாருங்கள். மானுட இயல்புகள் எத்தனை எத்தனைப் படித்தரங்களில் இருந்து வருகின்றன என்பது தமக்கு நன்கு விளங்கும்.

''மக்களுள் நம் காட்சிக்கு எட்டாத கூட்டத்தார்கள் சிலர் இருக்கின்றனர். நம்போன்று உடல் எடுத்து வாழ்ந்திருப்பதற்கிடையில் நித்திய முக்தர்களாகச் சிலர் இருந்துவருகின்றனர். முறையாக முயற்சி பண்ணி இப்பிறவியில் முக்தியைப் பெற்றுள்ளவர்கள் இருக்கிறார்கள். முக்திக்காக அரும்பாடுபடுபவர்கள் இருக்கிறார்கள். உலக பந்தபாசங்களிலேயே உழன்று கொண்டிருப்பவர்களும் இருக்கிறார்கள். இத்தனைவிதப் பாங்குடைய மாந்தர்கள் உலகில் வாழ்ந்திருக்கிறார்கள்! நாரதர், சுகதேவர் போன்றவர்கள் நித்திய முக்தர்களாகிறார்கள். அன்னவர்களை ஒரு பெரிய நீராவிக் கப்பலோடு சீர்தூக்கலாம். நீராவிக்கப்பலொன்று தான் மட்டும் கடலைக் கடந்து அன்னிய நாடு போய்ச்சேருவதில்லை. கணக்கற்ற பிரயாணிகளை வெளிநாடுகளுக்கு அது எடுத்துச் செல்லுகிறது. ஒட்டகம், யானை போன்ற பெரிய விலங்குகளையும் அது எடுத்துச் செல்ல வல்லது. நித்திய முக்தன் ஒருவனை ஒரு பெரிய தோட்டத்துக்குரிய கண்காணிப்பாளனோடு ஒப்பிடலாம். ஒரு பெரிய தோட்டத்தின் ஒரு பகுதியை அவன் முதலில் தன் பராமரிப்பில் உட்படுத்துகிறான். அடுத்தபடியாக இன்னொரு பகுதியைத் தன்னுடைய ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர ஏற்பாடு செய்கிறான். அதே விதத்தில் நித்திய முக்தர்களாக இருப்பவர்கள் எண்ணிக்கையில் அடங்காத மக்களை உய்விக்க முயற்சி எடுத்துக் கொள்ளுகின்றனர். அதற்கு அடுத்தபடியாக முக்தியைப் பெற முயலுகிறவர்கள் உலக பந்த பாசங்களினின்று தங்களை விடுவித்துக்கொள்ள அல்லும் பகலும் அரும்பாடுபடுகின்றனர். அப்படி முயலுகின்றவர்களுள் ஒரு சிலர் உலகத்தளையினின்று தங்களை விடுவித்துக் கொள்கின்றனர். அன்னவர்களை நாம் முக்த புருஷர்கள் என்று மொழிகிறோம். வலையினின்று தங்களை விடுவித்துக் கொண்ட மீன்களோடு முக்த புருஷர்களை ஒப்பிடலாம். இனி நித்திய முக்தர்களோ உலக பந்தபாசங்களில் ஒருபொழுதும் அகப்பட்டுக் கொள்வதில்லை. செம்படவனுடைய வலையில் ஒரு பொழுதும் அகப்பட்டுக் கொள்ளாத திறமை வாய்ந்த மீன்கள் சில இருக்கின்றன. நித்திய முக்தர்களை அத்தகைய மீன்களோடு ஒப்பிட்டுச் சொல்லலாம். எக்காரணத்தை முன்னிட்டும் நித்திய முக்தர்கள் உலக பந்தபாசங்களில் அகப்பட்டுக் கொள்ளமாட்டார்கள்.

''இனி, பிறவிப்பெரும் பிணியிலேயே சதா உழன்று கொண்டிருக்கும் ஜீவர்கள் இருக்கிறார்கள். தங்களுடைய பரிதாபகரமான நிலை அவர்களுக்கு விளங்குவதில்லை. சில மீன்கள் வலையில் அகப்பட்டுக் கொள்ளுகின்றன. அப்படி அகப்பட்டுக் கொண்டது அவைகளுக்குத் தெரியாது. கவலையற்று வலையினுள் அவைகள் கிடக்கின்றன. அவைகளுக்கு நிகராக உலக பந்தபாசங்களில் உழல்பவர்கள் இருக்கிறார்கள். கடவுளைப் பற்றியோ, முக்தி மார்க்கத்தைப் பற்றியோ பேச்செடுத்தால் அவ்விடத்தினின்று அவர்கள் அப்பொழுதே வெளிக்கிளம்பி விடுவார்கள். 'கடவுளைப்பற்றிய பேச்சு இப்பொழுது எதற்காக? சாகும் தறுவாயில் அவரைப்பற்றி நினைத்துக்கொள்ளலாம்' என்று உலகப் பற்றுடையார் பேசுவார்கள். பிறவிப் பிணியில் உழன்று கொண்டிருப்பவர்களுக்கும் அந்தியகாலம் ஒன்று வருகிறது. மரணம் அவர்களை அணுகிக் கொண்டிருக்கிறது. அத்தகைய நெருக்கடியிலும் அவர்கள் தங்களுடைய மனைவிமார்கள் மக்கள் முதலாயினோரிடம் தீபத்தில் அத்தனை திரிகளைப் போட்டு எண்ணெயை ஏன் வீண்விரயம் பண்ணுகிறீர்கள்? ஒரே ஒருதிரி போதுமானது. அதனால் எண்ணெய்க்கு வீண் செலவில்லை' என்று இயம்புவார்கள். கடைசியாக மரணம் வந்து தங்களைப் பிடித்துக்கொண்டதை அவர்கள் உணருகிறார்கள். 'ஐயோ அந்தியகாலம் வந்து விட்டதே. நான் கண்மூடிய பிறகு என்னுடைய மனைவியையும், மக்களையும் யார் காப்பாற்றுவார்கள்?' என்று புலம்புவார்கள். இதுவே உலகப்பற்றில் உழல்பவர்களுடைய போக்கு ஆகும்.''

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

344. ஓராமல் எல்லாம்
ஒழிந்தேற்குன் தெய்வவருள்
தாரா திருக்கத்
தருமோ பராபரமே.

ஓராமல்-ஆராய்ச்சி செய்யாமல்; ஒழிந்தேற்கு-ஒதுக்கித்தள்ளியவனுக்கு.

படைத்தல், காத்தல், துடைத்தல் ஆகிய மூன்று கிருத்தியங்களையும் இறைவன் விளையாட்டாக ஏற்று வருகிறார். சிரமப்படாது செய்கிறசெயலுக்கு விளையாட்டு என்றுபெயர். இறைவன் இப்படி விளையாடுவதில் பொருள் ஏதேனும் உண்டா என்னும் கேள்வி எழுகிறது. உயிர்வகைகளைப் படிப்படியாகக் கீழ் நிலையினின்று மேல் நிலைக்கு எழுப்புவது இவ் விளையாட்டின் நோக்கமாகும். ஜீவாத்மாக்களுக்குப்பயிற்சி சாலையாயிருப்பது பிரபஞ்சம். பள்ளிக்கூடத்துப்பிள்ளை ஒருவகுப்பில் பெற வேண்டிய பயிற்சி எல்லாம் பெற்றனபின் அடுத்தபடியுள்ள மேல் வகுப்பிற்கு அவன் போகிறான். அதே விதத்தில் ஜீவாத்மாக்கள் ஒவ்வொரு பிறவியிலும் உள்ள பயிற்சியைப் பெற்றன பிறகு மரணத்தின் வாயிலாக மேலான பிறவிக்குப் போகின்றன. அதற்காக வென்றே ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரமாகிய மூன்று கிருத்தியங்கள் நடைபெற்று வருகின்றன. பல பிறவிகளில் பெறுகிற பயிற்சிகளையெல்லாம் பெற்றன பிறகு ஜீவாத்மாக்கள் மானுடப் பிறவிக்கு வருகின்றன. மானுடன் நிலையில் பல பிறவிகள் எடுத்துப் பிரபஞ்ச வாழ்வில் இன்பமும் துன்பமும் கலந்தே இருக்கின்றன என்னும் அனுபவம் வருகிறது. துன்பம் கலவாத இன்பம் பிரபஞ்ச வாழ்வில் இல்லை என்பது அனுபவபூர்வமாக வந்து அமைகிறது. அதன் பிறகு இயல்பாகவே உலகப்பற்று ஒழிந்துபட்டுப் போகிறது. விரக்தி அல்லது பற்றின்மை தானாகவே வந்தமைகிறது. பற்றின்மையைப் பெறுவதற்கு மக்களாகப் பிறந்துள்ள ஜீவாத்மாக்கள் எடுத்துக்கொள்ளுகிற காலத்துக்கு வரையறை கிடையாது. பெரும்பான்மையோர் கணக்கற்ற பிறவிகள் எடுத்த பிறகே உலகப்பற்றை விட்டொழிக்கின்றனர். ஒரு சிலர் உலக வாழ்விலுள்ள குறைபாட்டை அதிவிரைவில் அனுபவபூர்வமாகக் கண்டறிகின்றனர். அடியேனுடைய உள்ளத்தினின்று உலகப்பற்று ஒழிந்துபட்டுப் போகிறது. ஆதலால் இறைவா, உன்னுடைய அருளுக்கு என்னைப் பாத்திரமாக்கு என்று விண்ணப்பிக்கிறேன். எனக்கு வந்துள்ள விரக்தி உலக நடைமுறையின் பாங்கை முழுதும் அறிவதற்கு முன்பே வந்திருக்கலாம். ஆயினும் இனி எனக்கு உலகப் பற்று வேண்டாம் என்று இறைவா, உன்னிடம் விண்ணப்பிக்கின்றேன். இன்னும் கொஞ்ச காலம் இப்படியிருக்கிறபடியே இருந்து வா என்று என்னை ஒதுக்கிவைக்க வேண்டாம். கிருபைகூர்ந்து என்னை ஆட்கொண்டருள்வாயாக என்பது இக்கண்ணியின் கருத்தாகும்.

345. மோனந் தருஞான
மூட்டிஎனக்கு வட்டா
ஆனந்த வாழ்க்கை
அருளாய் பராபரமே

மோனம்-மௌனம் அல்லது வாய்பேசாமை. ஞானம் ஊட்டி-ஞானத்தை வழங்கி; உவட்டா-தெவிட்டாத.

பேச்சுக்கு எதிரிடையாயிருப்பது மௌனம். எங்குப் பேச்சு இருக்கிறதோ ஆங்குச் சலனம் உண்டு. சலனமே கர்மம் என விளக்கப்படுகிறது. பிரபஞ்சம் முழுவதும் சலித்துக்கொண்டிருக்கிறது. ஆதலால் அது கர்மசொரூபம். ஓசை முழுதும் கர்மத்தின் கூறு ஆகும். எங்கு ஓசை இருக்கிறதோ அங்கு மௌனம் இல்லை. 'குஹ்யானம் மௌனச் சாஸ்மி' என்று கிருஷ்ண பரமாத்மா தமது விபூதியைப் பகவத் கீதையில் விளக்குகிறார். எது சொல்லால் விளக்கப்படாதிருக்கிறதோ அது இரகசியம். ரகசியங்களுள் நான் மௌனம் என்பது இக் கூற்றின் உட்பொருளாகும். ஆதலால் மௌனம் பிரபஞ்சத்தோடு சம்பந்தப்படாதது. பிரபஞ்சத்தின் செயலனைத்தும் ஓசை மயமாய் இருக்கிறது. ஆதலால் அதில் ரகசியம் ஏதுமில்லை. ஆத்மசொரூபமோ அசைவற்றது. ஆதலால் அதில் ஓசையில்லை. யாண்டும் அது

மௌனசொரூபம். பேச்சுக்கப்பாலிருப்பதைப் பேச்சின் மூலமாக விளக்கமுடியாது என்பதே கிருஷ்ணபரமாத்மாவின் கோட்பாடாகும்.

மனம் சலித்துக்கொண்டிருக்கிற பொழுது அது ஓசை மயமாயிருக்கிறது. சலனம் அடங்கு வதற்கேற்ப மனோவேகம் தணிகிறது. மனதின் சலனம் அறவே ஒடுங்குகிற விடத்து மனமும் மாயமாய் மறைந்து போகிறது. கனவற்ற உறக்கமே இதற்குச் சான்று ஆகிறது. கன வற்ற உறக்கத்தில் மனது ஒடுங்கிக் கிடக்கிற பொழுது அது தமோகுணத்தின் ஆதிக்கத் தில் இருக்கிறது. ஆயினும் அதற்கேற்ற ஆனந் தம் ஆழ்ந்த சுஷுப்தி அல்லது சுழுத்தியில் இருக்கிறது. மனம் முற்றிலும் பரிபாகம் அடைந்து மேல்நிலைக்கு வருகிறபொழுது அது சத்துவ குணத்தில் நிலைத்திருக்கிறது. சத்துவ குணத்திலும் மனது ஒடுங்குகிறது. ஆனால் தமோகுணத்தில் அது உறக்கத்தில் ஒடுங்கு கிற நிலைவேறு, சத்துவ குணத்தில் ஞானத் தில் ஒடுங்குகிற நிலை வேறு. தமஸில் கார் இருள் ஓங்கியிருக்கிறது. சத்துவத்தில் பிர காசம் உச்ச நிலையில் இருக்கிறது. உறக்கத் தில் கார் இருளில் மனம் ஒடுங்கியிருக்கிற வேளையில் ஆனந்தம் அனுபவிக்கப்படுகிறது. சத்துவத்தில் மனம் ஒடுங்கியிருக்கிற பொழு தும் ஆனந்தம் அனுபவிக்கப்படுகிறது. ஆனால் ஒன்று ஒடுங்கிய ஆனந்தம்; மற்றது விரி வடைந்த ஆனந்தம். ஒன்று சுஷுப்தி; மற்றது சமாதிநிலை. சுஷுப்தியில் ஆனந் தத்தை அனுபவிக்கிற மனிதன் பழைய ஆளா கவே ஜாக்ரதாவஸ்தைக்கு விழித்து எழுந் திருக்கிறான். சமாதி நிலையில் ஆனந்தத்தை அனுபவிக்கும் ஞானி ஜாக்ரதாவஸ்தைக்கு வருகிற பொழுது நிறைஞானியாக வருகிறான். பிறகு அவன் அனுபவிக்கும் ஆனந்தம் எக் காரணத்தைக் கொண்டும் தடைப்படுவதில்லை. அந்த நிலையை உவட்டாத ஆனந்த வாழ்க்கை என்றும், அதைத் தந்தருள வேண்டும் என்றும் அண்ணல் இறைவனிடம் விண்ணப்பிக்கிறார். பிரபஞ்சாதீதத்திலுள்ள மோனநிலையும், ஞான நிலையும், ஆனந்த நிலையும் ஒன்றே என்பது இக் கண்ணியின் கருத்தாம்.

**346.** வாடுமுகங் கண்டென்னை
வாடாம லேகாத்த
நீடுங் கருணை
நிறைவே பராபரமே.

வாடுதல்-சுருங்கிப் போதல்; நீடுங்கருணை-பெருங்கருணை; நிறைவு-பூரணம்.

இவ்வுலக வாழ்க்கையில் உயிர்களத்தனை யும் ஆழ்ந்த பற்றுதல் வைத்திருக்கின்றன. அதற்கேற்ற காரணமும் உண்டு. இவ்வுலக வாழ்க்கையில் உயிர்களனைத்துக்கும் இன்பம் கிடைக்கிறது. இயற்கையின் அமைப்பே இதற்கு அத்தாட்சியாகிறது. இவ்வுண்மையை நிலைநாட்டுவதற்கு சாஸ்திரப் பிரமாணம் ஏதும் தேவையில்லை. ஸ்தாவர ஜங்கமங்களாகிய உயிர்வகைகளனைத்தும் அதனதன் போக்கில் இன்புற்று வாழ்ந்திருக்கின்றன. அத்தனை உயிர் வகைகளுக்கும் விருத்தாப்பியம் வரவர இன்பம் குறைகிறது. ஆனால் மனிதனுடைய போக்கு அத்தகையதன்று. சின்னஞ்சிறு வயதினின்று ஆயுள் காலம் முழுவதிலும் மனிதன் இன்பத் தையும் துன்பத்தையும் மாறி மாறி அனுப வித்து வருகிறான். குழந்தை ஒன்று ஒரு நாளில் எத்தனை தடவை அழுகிறது. பிறகு சிரிக்கிறது என்பதைக் கணக்கில் எடுத் துக் கொள்ளவேண்டும். குழந்தைப் பருவம் தாண்டிச் சிறுவர் பருவம் பெறுகிற பொழுதும் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருகின் றன. மனிதன் யுவனாகின்ற பொழுதும் அவனுடைய நிலைமை அத்தகையதே. காளைப் பருவத்திலும் அவன் ஒரு நாளில் பலதடவை இன்புறவும், துன்புறவும் செய்கிறான். பிறகு விருத்தியாப்பியத்துக்குப் போகின்ற பொழுது அவனுக்கு இன்பத்தை விடத் துன் பமே அதிகம். வாடாமுகம் அவனைவிட்டு ஓடிப் போகிறது. வாடுகிற முகமே அவனிடம் எஞ்சி யிருக்கிறது. இவ்வுலக வாழ்க்கையில் துன் பம் கலவாத இன்பமில்லை என்னும் பேருண் மையைப் பல பிறவிகளுக்குப் பிறகு மனிதன் அறிந்து கொள்கிறான். இந்த விவேகம் ஓங்கு தற்கேற்ப அவனுக்கு இவ்வுலகில் விரக்தி வருகிறது. அதாவது பற்றுதல் குறைகிறது. துன்பங்கலவாத இன்பம் வேண்டுகின்றவன் அதைப் பரமனிடத்திருந்துதான் பெறமுடியும். இவ் வையக வாழ்க்கையில் அது வாய்க்காது என்னும் கருத்து இக்கண்ணியில் அடங்கி யிருக்கிறது.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

நாடுகளுக்கிடையில் போர் நிகழ்வதுண்டு. தேசப்பற்று உடையவர்கள் தங்கள் நாட்டுக்காக மகிழ்ச்சியோடு போர் புரிய ஆயத்தமாக இருக்கிறார்கள். மனைவி மக்களை விட்டு உலக சுகத்தைத் துறந்து நாட்டுக்காக உயிரையும் கொடுக்க ஆயத்தமாக இருக்கிறார்கள். பாரமார்த்திகப் பேறு பெறுவதற்கு வீடுவாசல்களை விட்டுப் புலன் இன்பங்களையும் துறந்து தெய்வத்திடம் சரண் புகுபவர்கள் முன்பு கூறினவர்களை விட மேலானவர்கள். மக்களின் நலனுக்காக, ஆத்மஞானம் பெறுவதற்காக நீ செயல்புரியவேண்டும். "மக்களுக்கு நலம் செய்வதில் காலம் வீணாகிறது என்று நீ எண்ணுவாயானால் அப்படிக் காலம் வீணாவதில் குற்றமில்லை. எத்தனையோ பிறவிகளை நீ வீணே கழித்து விட்டாய். மக்களுக்கு நலம் செய்வதில் ஒரு பிறவிதான் கழியட்டுமே! அதனால் உனக்கு நஷ்டம் ஒன்றும் வந்துவிடாது." இங்ஙனம் சுவாமி விவேகானந்தர் பகர்ந்துள்ளார். மக்கள் தொண்டும், தெய்வத் தொண்டும் நிகழ்ந்து வருதல் வேண்டும்! அதற்காகச் செலவழிக்கும் வாழ்வு வீணான வாழ்வு ஆகாது. அத்தகைய செயல்களின் மூலம் கடவுள் தரிசனம் பெறுவதற்கு மனதைத் தூய்மைப்படுத்துகின்றோம்.

ஜபம், தியானம் செய்வதற்குக் குறிப்பிட்ட காலம் ஒதுக்கி வைப்பது நல்லது. நல்ல சூழ்நிலை ஜபம், தியானம் செய்வதற்கு அவசியமானது. ஜபம், தியானத்தில் ஆர்வமில்லாதவர்களுக்கு மேற்கூறிய வசதிகள் வேண்டும். ஜபம் தியானம் செய்வதற்கு நல்ல சூழ்நிலை அமைவது இல்லை என்றும் அவகாசம் இல்லை என்றும் சாதனையில் நாட்டமில்லாதவர்கள் சொல்லுவார்கள். ஆனால் சாதனையில் ஆர்வமுள்ளவர்கள் எல்லாச் சூழ்நிலைகளிலும் ஜபம், தியானம் செய்வதை நிறுத்தமாட்டார்கள். அவர்கள்தாம் சாதனையில் முன்னேறி வருவார்கள். ஜபம், தியானம் செய்வதற்கு அவகாசம் இல்லை என்றும், நல்ல சூழ்நிலை இல்லை என்றும் சொல்லிக்கொண்டிருப்பவர்கள் சாதனையில் முன்னேற முடியாது. உன் உள்ளத்தில் கடவுள் சிந்தனை கொண்டிராவிடில் நீ சன்மார்க்கத்தில் முன்னேற முடியாது. நீ வேலையில்லாமல் இருக்கும் பொழுதோ, வேலை செய்வதற்கிடையிலோ கடவுளை நினைத்துக் கொண்டிருக்கவேண்டும். அந்தப் பழக்கம் உன் உள்ளத்தில் உறுதி பெறவேண்டும்.

இடைவிடாது தெய்வத்தைச் சிந்தித்துக் கொண்டிருப்பதுதான் தியானம் எனப்படும். கால,தேச, சூழ்நிலைகள் எத்தகையதாக இருப்பினும் அவற்றைப்பற்றிக் குறைசொல்லிக்கொண்டிருக்கக்கூடாது. எல்லா நிலைகளிலும் கடவுள் சிந்தனை உள்ளத்தில் இடம் பெற்றிருக்கவேண்டும். கடவுள் சிந்தனையில் மனது மூழ்கிவிடுமாயின் அதிலிருந்து உனக்கு எத்தகைய ஆனந்தம் கிடைக்கும் என்பது தெரியுமா? ஒருமுறை அப்பேரானந்தத்தை அனுபவித்து விடுவாய் ஆயின் மற்ற உலக சுகங்களெல்லாம் சுகங்களாக உனக்குத் தோன்றா. கடவுள் சுகம் ஒன்றே நிலைத்த சுகம் என்றும், அது ஒன்றே அனுபவிக்கவேண்டிய சுகம் என்றும் நீ அப்பொழுது அறிவாய். கற்கண்டுக் கட்டியைச் சுவைத்தவன் கருப்பட்டி கட்டியைச் சுவைக்க விரும்புவானா? என்று பரமஹம்சர் பகர்கிறார். கடவுள் சுகம் கற்கண்டுக் கட்டியாகிறது. உலக சுகம் கருப்பட்டி கட்டியாகிறது.

கர்மம் செய்துகொண்டே இரு. கர்மத்தைக் கண்டு பயப்படாதே. கடவுளுக்காகக் கர்மம் செய். உறுதியான மனதுடன் கடவுள் தொண்டு புரி. நீ எடுத்துக்கொண்ட காரியம் பெரியதாக இருக்கலாம் அல்லது சிறியதாக இருக்கலாம். சிறிய செயலாக இருந்தாலும் கவனத்துடனும், பொறுப்புடனும், அதைச் செய்யவேண்டும். உலகக் கிருத்தியங்களைத் திறமையுடன் யார் செய்கிறார்களோ அவர்கள் ஆத்ம சாதனங்களையும் விடாது திறமையுடன் செய்வார்கள். நீ எடுத்துக் கொண்ட காரியத்தைப் புனிதமானது என்று எண்ணினால்தான் நீ அதைச் சரியானபடி செய்ய இயலும். கர்மத்தின் விளைவை நீ கருத்தில் வைக்கவேண்டியதில்லை. நீ செய்யும்

கர்மத்தைக் கடவுளுக்கு அர்ப்பணம் செய்து அக்கர்மத்தை மகிழ்ச்சியோடு செய்யவேண்டும். நீ எடுத்துக்கொண்ட பணி கடவுள் பணி என்று எண்ணினால்தான் உன் மனம் அதில் பாதிக்கப்படாமல் இருக்கும். இது கர்மத்தைப் பற்றிய ரகசியமாகும். இந்த ரகசியத்தை நீ மறந்து விடுவாயானால் உன் மனம் குழப்ப மடையும். குழப்பமடைந்த மனதுடன் செய்யும் உலக காரியமும் நிறைவேறாது. சாதனையிலும் நீ வெற்றி காண முடியாது.

பேரும் புகழும் உன்னைத் தொடர்ந்து வர நீ ஒரு சிறந்த காரியத்தைச் சுலபத்தில் செய்து முடித்துவிடலாம். ஆனால் அத்தகைய காரியங்களில் உன்னை நீ எத்தகையவன் என்று அறிந்துகொள்ள முடியாது. ஒரு மனிதனை அறிந்துகொள்வதற்கு அவனுடைய தினசரி செயல்களை ஆராயவேண்டும். அவனுடைய ஒவ்வொரு செயலும் அவனுடைய உண்மையான பண்பை வெளிப்படுத்தும். சுயநலமற்ற கர்மயோகி எடுத்துக்கொண்ட காரியத்தில் தன்னை முழுவதும் ஒப்படைத்துவிடுவான். எளிய காரியமாக இருந்தாலும் முழு மனதையும் அதில் ஈடுபடுத்திச் சிரத்தையுடன் அதைச் செய்து முடிப்பான். பிறர் தன்னைப்போற்ற வேண்டும், அல்லது புகழவேண்டும் என்று கர்ம வீரன் நினைப்பதில்லை. பேர் புகழில் ஆசைப் பட்டு அவன் கர்மத்தில் ஈடுபடுவதில்லை.

கடவுளை மறந்து நீ செயல்படுவாயானால் ஆணவ அகங்காரம் உடையவன் ஆகிவிடுவாய். ஆகையால் கடவுளை மட்டும் நீ ஒரு பொழுதும் மறந்துவிடாதே. நீ அரிய பெரிய காரியம் செய்தாலும்சரி, செய்யாவிட்டாலும் சரி கடவுள் சிந்தனையில் மட்டும் யாண்டும் இருந்து வா. இந்த மனோபாவனையை நீ உடைத்திருப்பதற்கு உன் வாழ்க்கையில் என்ன நிகழ்ந்தாலும் நீ சாதனையைச் செய்து கொண்டே இரு.

புலனடக்கம் மிகவும் அவசியமானது. புலனடக்கம் எப்படிப் பழகுவது என்பதை நீ அறிந்திருக்க வேண்டும். புலனடக்கம் பழகுகின்ற அளவு உன் உடல் சக்தியெல்லாம் மனோசக்தியாக மாறுகிறது. "நான் காமத்தை வெல்லுவேன். கோபத்தையும் ஆசையையும் வெல்லுவேன்" என்று இறுமாப்பு கொள்வாய் ஆனால் நீ அவைகளை ஒருநாளும் வெல்ல முடியாது. மனதைக் கடவுள்பால் செலுத்துவாயானால் அவைகளெல்லாம் உன் மனதைவிட்டுத் தாமாக அகன்றுவிடுகின்றன. பற்றற்றான் பற்றினைப் பற்றி உலகப்பற்றினை விட்டுப் பழகவேண்டும். "நீ கிழக்கு நோக்கி எவ்வளவு தூரம் செல்கிறாயோ அவ்வளவு தூரம் நீ மேற்குத் திசையை விட்டுவந்தவன் ஆகிறாய்" என்று ஸ்ரீராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். உருக்கத்தோடு கடவுளைக் கூவி அழை. உருக்கத்துடன் பிரார்த்தனை செய். அப்பொழுது புறப்பொருள்கள் உன் புலன்களை இழுக்கமாட்டா.

பெயரளவுக்கு ஜபம், தியானம் செய்தால் போதாது. ஜபம் தியானம் ஆழ்ந்து செய்ய வேண்டும். வாய்ப்புக் கிடைக்கும் பொழுது ஓரிரண்டு மணி நேரம் ஜபம் தியானத்திற்கு ஒதுக்கினால் போதும் என்று மெத்தனமாக இருக்கக்கூடாது. சதா மனம் ஈசுவரச் சிந்தனையில் ஈடுபடவேண்டும். தோத்திரப் பாடல்களையும், கடவுளின் மகிமைகளையும் பாடுவதில் நீ ஆனந்தம் அடையவேண்டும். அப்பொழுதுதான் உனக்குக் கடவுள் காட்சி கிட்டும். கடவுள் சிந்தனையில் ஆழ்ந்து மூழ்குவாயாக. காலத்தை வீணாக்காதே.

ஆரம்பநிலையில் ஜபம், தியானத்தைப் படிப்படியாக அதிகரித்துக் கொண்டுவரவேண்டும். திடீரென்று ஜபம், தியானத்துக்குள்ள நேரத்தை நீ அதிகரிக்க முயல்வாயானால் அதன் விளைவைத் தாங்குவதே உனக்குக் கஷ்டமாக இருக்கும். திடீரென்று ஜப தியானத்துக்கு உரிய நேரத்தை அதிகரிக்கும் பொழுது மனச் சோர்வு உண்டாகும். மனதில் சோர்வு வந்துவிட்டால் மனம் தியானம் செய்யும் சக்தியை இழந்துவிடும். மனதில் உற்சாகம் இல்லாது போய்விட்டால் அம் மனதைக் கொண்டு ஆத்ம சாதனம் செய்வது கஷ்டம். எனவே மனதை எப்பொழுதும் உற்சாகமாக வைத்திரு. உலக ஆசை மனதிலிருந்து அகலும் பொழுதுதான் மனதுக்குச் சாதனையில் உற்சாகம் ஏற்படும்.

கடவுள் அருளால் அனைத்தும் இயங்கிவருகின்றன. அவர் அருள் வேண்டுமென்று சதா பிரார்த்தனை செய்.

# தெய்வாம்சம் பொருந்திய கிறிஸ்து

(சுவாமி விவேகானந்தர் 1900-ஆம் ஆண்டில் கலிபோர்னியாவிலுள்ள லாஸ்ஏஞ்சல்ஸ் என்னுமிடத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு )

[ 58ஆம் பக்கத் தொடர்ச்சி ]

"நாங்கள் மிகவும் தாழ்ந்தவர்கள்; நாங்கள் மிகவும் ஏழைகள்" என்னும் மனோகற்பிதங்களைப் போக்கி விடுங்கள். உங்களை அடிமைகளென்றோ, நசுக்கப்பட்டவர்கள் என்றோ, மிதிக்கப்பட்டவர்கள் என்றோ, துன்பப்படுத்தப்பட்டவர்கள் என்றோ நீங்கள் நினைக்கக் கூடாது. எதனாலும் பாதிக்கப்படாத, நசுக்கப்படாத, மிதிக்கப்படாத, அழிக்கப்படாத ஆத்ம சொரூபம் நீங்கள். நீங்கள் கடவுளுடைய புத்திரர்கள். அழிவில்லாத ஆத்மா நீங்கள். "கடவுள் சாம்ராஜ்யம் உங்களிடத்திலிருக்கிறது" என்று ஏசுநாதர் பகர்ந்திருக்கிறார். "நானும் என் தந்தையும் ஒருவரேயாவோம்" என்று ஏசுநாதர் பகர்ந்துள்ளார். "நான் கடவுளுடைய மைந்தன் மட்டுமன்று, நானும் என் தந்தையும் ஒருவரே என்பதை நான் ஹிருதய பூர்வமாக உணர்கிறேன்" என்று எழுந்து நின்று சொல்லுவதற்கு உங்களிடம் தைரியம் இல்லையா? அங்ஙனம் நாசரத்து ஏசுநாதர் இயம்பியுள்ளார். அவர் இவ்வுலகைப் பற்றியோ, இவ்வாழ்வைப்பற்றியோ ஒரு பொழுதும் பேசியதில்லை. இவ்வுலக வாழ்வில் அவர் யாதொரு சம்பந்தமும் வைத்துக் கொள்ளவில்லை. இவ்வுலகைத் தன்வசம் வைத்துக்கொண்டு, உலக மக்களை உயர் நெறிக்கு உந்தித்தள்ளி உயர் லட்சியத்தை அடையும்படி செய்தார். ஒவ்வொருவரும் தங்கள் நிஜசொருபத்தை உணரும்வரையில், உலகத்தை விட்டுத் துன்பம் அகலும் வரையில் உலகை விட்டு மரணம் ஓட்டப்படும் வரையில் அவருடைய செயலை நிறுத்தமாட்டார்.

இயேசுநாதரைப் பற்றிப் பலவிதமான கதைகள் எழுதியிருப்பதை நாம் படித்திருக்கிறோம். அறிஞர்களையும், அவர்கள் எழுதிய நூல்களையும், அவர்களுடைய ஆராய்ச்சியையும் நாம் அறிவோம். அவைகளெல்லாம் பல்வேறு நூல்களைப் படித்துச் செய்தவைகளாகும். புதிய ஏற்பாடு எவ்வளவு தூரம் உண்மை என்பதையும் அவருடைய வாழ்க்கை எவ்வளவு தூரம் சரித்திர சம்பந்தப்பட்டது என்பதையும் நாம் இப்போது விவாதிக்கப் போவதில்லை. ஏசுநாதர் தோன்றிய ஐந்நூறு ஆண்டுகளுக்குள் புதிய ஏற்பாடு எழுதப்பட்டதா என்பதைப்பற்றிய விஷயம் முக்கியமானதன்று. அவருடைய வாழ்வு எவ்வளவு தூரம் உண்மை என்பதும் முக்கியமானதன்று. இவைகளுக்கெல்லாம் பின்னணியாக ஓர் உண்மை இருக்கிறது. அதை நாம் பின்பற்றியாக வேண்டும். பொய்யுரைப்பதற்கும், உண்மை பேசுவது போன்று பாசாங்கு செய்யவேண்டும். உண்மை மாறுவதது. இல்லாததொன்றை நீங்கள் பாவனை செய்ய முடியாது. காணாததொன்றை நீங்கள் பாவனை செய்ய முடியாது. ஏதோ ஒரு மாபெரும் சக்தி யாவற்றிற்கும் அடிப்படையாக இருக்கவேண்டும். அது தன்னை இப்பிரபஞ்சமாகவும் தோற்றுவித்துக் கொண்டிருக்க வேண்டும். அதைப் பற்றி நாம் பேசுகின்றோம். அது எங்குமிருக்கிறது. அதைப்பற்றி அறிஞர்கள் பலவிதமாகப் பேசுவார்கள். அவர்கள் பேச்சுக்களைக் குறித்து நாம் பயப்படவேண்டியதில்லை. நான் கீழநாட்டைச் சேர்ந்தவன். நாசரத்தில் தோன்றிய இயேசுவை நான் வழுத்துவேனால் அவரைக் கடவுளாக வைத்துத்தான் வழுத்துவேன். அம்முறையில் அவரை வழிபடுவதற்கு எங்களுக்கு உரிமையில்லையென்று நீங்கள் கருத முடியுமா? நம்முடைய நிலைக்கு அவரைக் கீழே இறக்கிக்கொண்டு வந்து அவரை ஒரு பெரிய மனிதரென்று மட்டும் கருதுவோமேயானால், அவரை ஏன் வழிபட வேண்டும்? "அவதாரபுருஷர்கள் பரம்பொருளின் சிறந்த குழந்தைகளாகிறார்கள். தங்களிடமுள்ள அருளொளியைப் பிரகாசிக்கச் செய்திருக்கிறார்கள். அருள் ஒளியே அவர்கள் ஆகிவிட்டார்கள். அவர்களை வழிபடுவதன் மூலம் நாம் அவர்களுடன் ஒன்றுபட்டு விடுகின்றோம். நாம் அவர்கள் மயம் ஆகிவிடுகின்றோம்." இங்ஙனம் எங்கள் சாஸ்திரங்கள் பகர்கின்றன.

மனிதன் கடவுளை மூன்று விதங்களில் பார்க்

கின்ருன். கல்வியறிவில்லாத பாமரமனிதன் கடவுள் வெகுதூரத்திற்கப்பால் எங்கேயோ சொர்க்கத்தில் அரியாசனத்தின் மீது சிறந்த நியாயாதிபதியாக இருப்பதைக் காண் கின்ருன். கடவுளை அவன் ஒரு பெரிய நெருப் பாகக் காண்கின்ருன். அவன் கடவுளைப் பயங் கர சொருபமாகக் காண்கின்ருன். அப்படி அவன் காண்பதும் அவனைப் பொறுத்தவரை யில் நல்லது. அதில் ஒரு தவறும் இல்லை. தவற்றிலிருந்து உண்மைக்கு மக்கள் செல்கிருர் களென்று நாம் கருதக்கூடாது. சிறிய நிலையி லிருந்து பெரிய நிலைக்கு வருகிருர்களென்று நாம் நினைக்கவேண்டும். கீழான உண்மையி லிருந்து மேலான உண்மையை நோக்கி மக்கள் வருகிருர்களென்று சொல்ல வேண்டுமே யொழிய பொய்மையிலிருந்து மெய்மைக்கு வருகிருர்களென்று நினைக்கக்கூடாது. நீ இங் கிருந்து புறப்பட்டு சூரியனை நோக்கி ஒரு நேர் கோட்டில் போய்க்கொண்டிருக்கிருய் என்று வைத்துக்கொள்வோம். இங்கிருந்து சூரிய னைப் பார்க்கும் பொழுது அது மிகச் சிறியதா கத் தெரிகிறது. கோடிக்கணக்கான மைல்கள் அதை நோக்கிப் போய்விடுவாயானல் சூரியன் இப்பொழுது தெரிவதைவிடப் பெரியதாகத் தெரியும். அப்படி சூரியனை நோக்கிப்போகும் ஒவ்வொரு படித்தரத்திலும் சூரியன் பெரிய தாகிக்கொண்டு வருவதைக் காணலாம். அப் படிச் சூரியனை நோக்கிச் செல்லும் வெவ்வேறு நிலைகளில் ஒரே சூரியனை இருபதாயிரம் நிழல் படங்கள் எடுத்திருக்கிருய் என்று வைத்துக் கொள்வோம். அவை ஒவ்வொன்றும் அவை களுக்கிடையில் வேறுபட்டவைகளாக இருக் கும். ஆனல் அவை யாவும் ஒரே சூரிய னுடைய நிழல் படங்கள் என்பதை நீங்கள் மறுக்க முடியுமா? யாண்டும் பிரகாசமாக இருக்கும் தெய்வத்தினிடத்து எடுத்துச் செல் வதற்குரிய மார்க்கங்கள் பல இருக்கின்றன. அம்மார்க்கங்கள் சமயங்களெனப்படுகின்றன. அவைகளுக்கிடையில் உயர்வு தாழ்வு உண்டு. சில மதங்கள் தரத்தில் கீழான மார்க்கங்களை யும், இன்னும் சில மதங்கள் மேலான மார்க்கங் களையும், போதிக்கின்ற அமைப்புகளாக இருக் கின்றன. சில மதங்கள் சாதாரண கருத்துக் களைப் புகட்டுபவைகளாக இருக்கின்றன. இன் னும் சில மதங்கள் உயர்ந்த கருத்துக்களைப் புகட்டுபவைகளாக இருக்கின்றன. மதங் களுக்கு இடையே இவ்வேற்றுமையைத் தவிர வேறு வேற்றுமை இல்லை. சிந்திக்கும் திறன் இல்லாத மக்கள் உலகம்முழுவதும் இருக்கிருர் கள். இப்பிரபஞ்சத்துக்குப் புறத்தே சொர்க் கத்தில் கடவுள் ஒருவர் இருக்கிருர் என்றும், அவர் அங்கிருந்துகொண்டே இப் பிரபஞ் சத்தை ஆட்சி புரிந்து வருகிருர் என்றும், அவர்கள் கருதுகின்றனர். குற்றம் செய்தவர் களைக் கண்டிக்கிருர் என்றும், நலம் செய்கிற வர்களுக்கு அருள் செய்கிருர் என்றும், அவர் கள் கடவுளைப்பற்றி எண்ணுகின்றனர். ஆத் மீகத் துறையிலே முன்னேற்றம் அடைந்தவர் கள் கடவுள் எங்கும் நிறைந்திருக்கிருர் என் றும், அவர் தங்களிடத்திலும் இருக்கிருர் என் றும் எண்ணுகின்றனர். நமக்கு வெகுதூரத் துக்கப்பால் சொர்க்கத்தில் மட்டும்தான் கட வுள் இருக்கிருர் என்று கருதாது அவர் எங் கும் உள்ளவர் என்றும் யாவரிடத்திலும் உயி ருக்குயிராய் இருக்கிருர் என்றும்,சமயத்துறை யில் முன்னேறியவர்கள் கடவுளைப் பற்றிக் கருத்துக் கொண்டிருக்கின்றனர். ஒவ்வொரு சரீரத்தையும் இயக்குவதற்குரிய ஜீவாத்மா இருப்பது போன்று எல்லா ஜீவாத்மாக்களை யும் இயக்குவதற்குப் பரமாத்மா ஒருவர் இருக் கின்ருர். ஜீவாத்மா பரமாத்மாவின் அம்ச மாகும். தன் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திப் பெருநிலை அடைந்தவர்கள் முடிந்தநிலையில் கடவுளைக் காண்கின்ருர்கள். ''மனத்தூய்மை படைத்தவர்கள் பாக்கியவான்கள்.ஏனென்ருல் அவர்கள் கடவுளைக் காண்கிருர்கள்.'' இங் ஙனம் புதிய ஏற்பாடு பகர்கின்றது. மன தைப் பண்படுத்திக்கொண்டே செல்கின்றவர் கள் முடிந்தநிலையில் தாங்களும் தங்கள் தந்தை யான கடவுளும் ஒன்றே என்பதை உணர் கிருர்கள்.

நாம் வேறு; கடவுள் வேறு. நாம் கடவுளு டைய அம்சம். நாமும் கடவுளும் ஒன்றே. இம்மூன்று படித்தரங்களும் புதிய ஏற்பாட் டில் சொல்லப்பட்டிருக்கின்றன. ''பரமபதத் தில் இருக்கும் எங்கள் பிதாவே, உம்முடைய பெயரால் எங்களைத் தூய்மையாக்கு'' என்று இயேசு பகர்ந்துள்ளார். இது மிக எளிய

பிரார்த்தனை. குழந்தைகளுக்கும் இப்பிரார்த்தனை ஏற்றது. பாமரமக்களும் செய்வதற்குரிய பொதுப் பிரார்த்தனையாக இருக்கிறது. பண்பாட்டில் மேலே சென்றவர்களுக்கு இன்னும் மேலான கருத்து ஒன்றை அவர் பகர்ந்திருக்கின்றார். ''நான் என் தந்தையிடத்தில் இருக்கின்றேன். நீங்கள் என்னிடத்தில் இருக்கின்றீர்கள். நான் உங்களிடத்தில் இருக்கிறேன்.'' இங்ஙனம் சமயத்துறையில் மேலே வந்தவர்களுக்குப் பகர்ந்திருக்கிறார். யூதர்கள் அவரைப் பார்த்து நீங்கள் யார் என்றுகேட்டபொழுது "நானும் என் தந்தையும் ஒன்றே" என்று அவர் கூறினார். அவர் அங்ஙனம் கூறியது யூதர்களுக்குத் தெய்வ நிந்தனையாகத் தோன்றியது. அவர் அப்படிக் கூறியதன் கருத்து என்னவென்று தெரியுமா? "நீங்கள் அனைவரும் தெய்வங்கள். நீங்கள் பரம்பொருளின் குழந்தைகளாவீர்கள் என்று பண்டைய தீர்க்க தரிசிகளும் கூறியிருக்கிறார்கள். இங்ஙனம் கடவுளைப்பற்றிய கருத்துக்களில் மூன்று படித்தரங்கள் இருக்கின்றன. கடவுள் வேறு நீங்கள் வேறு என்பது ஆரம்பநிலை. அவ் ஆரம்ப நிலையில் கடவுள் வழிபாட்டைத் துவங்குவது எளிது. கடவுளும் நீங்களும் ஒன்றே என்னும் மூன்றாவது நிலை இறுதியானது. அந்நிலைக்கு வழிபாடு உங்களை எடுத்துச் செல்லவேண்டும்.

கிறிஸ்து என்னும் தேவதூதர் நமக்கு உண்மைப் பாதையைக் காட்டவந்தார். மெய்ப்பொருள் வெறும் சடங்குகளிலும், உருவங்களிலும் இல்லை. துன்பத்தைத் தரும் வெறுப்பையும், சிக்கலையும் உண்டுபண்ணக்கூடிய தத்துவக் கொள்கைகளின் மூலம் பரமாத்மா தரிசனம் பெறமுடியாது. அத்தகைய குழப்பந் தரும் கருத்துக்களை நீங்கள் கற்றுக்கொள்ளக் கூடாது; குழப்பத்தைத் தரும் நூல்களையும் நீங்கள் படிக்கக் கூடாது. செல்வமோ, பதவியோ, அதிகாரமோ, கல்வியோ, முக்திக்குத் தேவை இல்லை. மனத்தூய்மைதான் முக்திக்குத் தேவை. தூய்மையான உள்ளம் படைத்தவர்கள் பாக்கியவான்கள். கடவுள் தூய்மையேவடிவானவர். தூய்மையே கடவுள். தூய்மையே கடவுளுக்குச் சுவாசம் ஆகிறது என்று விவிலிய நூல் கூறுகிறது. தூய்மை கடவுளின் ஆன்மா என்று குரான் கூறுகிறது. கடவுள் எப்பொழுதாவது தூய்மையற்றவராக இருப்பார் என்று நீங்கள் சொல்லமுடியுமா? பல ஜன்மாந்திரங்களில் நாம் செய்த நல்வினை, தீவினைகள் என்னும் அழுக்குகள் ஆத்மாவை மறைத்திருக்கின்றன. ஆகையினால் ஆத்மா நமக்குப் புலப்படாமல் இருக்கிறது. முறையற்ற செயல்கள், உண்மையில்லாத செயல்கள் ஆகிய வெவ்வேறு விதமான செயல்கள் நம் மனதில் அக்ஞானத்தை வளர்த்து நம்மனதிலுள்ள ஆத்மாவைமறைத்து வைத்திருக்கின்றன. மனதிலிருந்து அத்தகைய அழுக்குகளைச் சுத்தம் செய்வது அவசியம். அப்படிச் சுத்தம் செய்து விட்டால் உள்ளத்தில் ஆத்மா பிரகாசிப்பதை உணரலாம். ''உள்ளத்தூய்மை படைத்தவர்கள் பாக்கியவான்கள்'' ஏனெனில் அவர்கள் கடவுளைக் காண்கின்றார்கள். ''கடவுளுடைய சாம்ராஜ்யம் உங்களிடத்தில் இருக்கிறது.'' இங்ஙனம் இயேசுநாதர் பகர்ந்துள்ளார். கடவுள் சாம்ராஜ்யம் உங்களிடத்தில் இருக்க அவரைத் தேடிக்கொண்டு எங்கே செல்கிறீர்கள்? என்று அவர் கேட்கிறார். உங்களிடத்திலுள்ள அழுக்கைப் போக்குங்கள். உங்களிடத்தில் ஆத்மாவைக் காண்பீர்கள். ஆத்மா உங்களுடைய உடைமை. உங்களுக்குச் சொந்தமில்லாத ஒன்றை எப்படிப் பெறமுடியும்? உங்களுடைய உடைமைப் பொருளைப்பெற உங்களுக்கு உரிமை உண்டு. நீங்கள் அழியாப் பொருளின் வாரிசு ஆவீர்கள். அமரநிலையில் இருக்கின்ற தந்தையின் புதல்வர்கள் நீங்கள். இயேசுநாதர் கொண்டுவந்த பெரிய செய்தி இது ஆகும்.

இயேசுநாதர் கொண்டுவந்த மற்றொரு செய்தி துறவு ஆகும். எல்லா மதங்களுக்கும் துறவே அடிப்படையாக இருக்கிறது. உங்களை எப்படித் தூய்மையாக்கிக் கொள்ள முடியும்? துறவறம் மூலம் தான் உங்களைத் தூய்மை ஆக்கிக்கொள்ள முடியும். உடல் தூய்மை நீரால் அமைவது போன்று உள்ளத் தூய்மை துறவால் அமைகின்றது. துறவு அல்லது தியாகத்தை எல்லாச் சமயங்களும் வற்புறுத்துகின்றன. மனம் உலக சுகங்களிலிருந்து பிரிந்து இருப்பதே துறவு ஆகும்.

(தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் -115

*674.* ब्राह्मणी ப்ராஹ்மணீ — பிராமண சொரூபமாயுள்ள சிவனுருடைய சகதர்மணீ யாதலால் அம்பிகை பிராமணீ எனப் பெயர் பெற்றுள்ளாள்.

சிவனுரைப் பிராமனன் எனப் பகருவது முற்றிலும் பொருத்தமானது. மக்களுள் பண்பாட்டில் உச்ச நிலையடைந்திருப்பவன் பிராமணன். கல்லூரிப் படிப்பை வெற்றிகரமாகப் பூர்த்திபண்ணுபவன் Graduate கல்விப் பட்டதாரி எனப் பெயர் பெறுகிறுன். கல்வித் துறையில் பாலர்வகுப்பில் பாடம் துவக்கிக் கல்லூரிப் படிப்பில் பூர்த்தி பண்ணுபவன் அத்தகைய பட்டதாரி ஆகிறுன். அதே விதத்தில் நான்கு வருணங்களுள் கடைசி வருணமாக இருக்கின்ற சூத்திர நிலையில் வாழ்க்கையைத் துவக்கி அந்தணனுக அதைப் பண்படுத்துபவன் பிராமணன் ஆகின்றுன். இடைக் காலத்தில் பிறப்பை முன்னிட்டு மானுடனெருவனைப் பிராமணன் எனப்பகருவது முற்றிலும் பொருளற்றது என்பதற்குப் பிராமணன் எனக் கூறப்படும் இக்காலத்திய மானுடனே சான்று ஆகிறுன். கற்றவனுக்குப் பிள்ளையாகப் பிறப்பவன் கற்றவனல்லன். டாக்டருக்குப் பிள்ளையாகப் பிறப்பவன் டாக்டர் அல்லன். பிறகு பயிற்சியின் வாயிலாக அந்நிலையை எட்ட வேண்டும். பிறந்துள்ள மானுட சிசு ஒவ்வொன்றும் ஆரம்ப தசையில் சூத்திரனுடைய நிலையிலிருக்கின்றது. சம்ஸ்க்காரத்தின் வாயிலாக அச்சிசு படிப்படியாக மேலான வருணங்களுக்கு முன்னேறிச் செல்லுகின்றது. பள்ளிக்கூடத்தில் படிக்கின்றவர்கள் மத்தியதரப் பள்ளியிலோ உயர்நிலைப்பள்ளியிலோ அல்லது கல்லூரியின் ஆரம்ப நிலையிலோ படிப்பை நிறுத்திவிட்டால் அதற்கேற்ற தரம் அவர்களுக்கு அமைகின்றது. அதே பாங்கில் சூத்திர நிலையிலிருந்து மேல் நிலைக்குச் சம்ஸ்காரத்தின் மூலமாகப் போகின்றவர்கள் த்விஜர்கள் அல்லது இருபிறப்பாளர் என இயம்பப்படுகின்றனர். மனபரிபாகத்தில் மேல் நிலைக்குப் போவது இரண்டாவது பிறப்பு எனப் பாராட்டப்படுகிறது. ஒரு சிறிதளவு மேல் நிலைக்குப் போயிருக்கிறவன் வைசியன் என்றோ த்விஜ அதமன் என்றோ இயம்பப் பெறுகிறுன். மனப் பண்பாட்டில் பெரும்பகுதியை எட்டியிருப்பவன் க்ஷத்திரியன் என்றோ த்விஜ மத்திமன் என்றோ அழைக்கப்பெறுகிறுன். மனபரிபாகத்தில் உச்சநிலையை எட்டியிருப்பவன் பிராமணன் என்றோ த்விஜ உத்தமன் என்றோ இயம்பப்பெறுகிறுன். முறையாகப் பொருள் ஈட்டுதலிலும் அதைப் படைத்திருப்பதிலும் வல்லவனுயிருப்பவன் வைசியன். அறநெறி பிறழாதிருப்பவன் அறநெறியைச் சமுதாயத்தில் நிலைநாட்டுபவன் க்ஷத்திரியன் ஆகிறுன். அருளே வடிவெடுத்திருப்பவனும், அருளை மக்களுக்கிடையில் நல்குபவனும் அந்தணன் அல்லது பிராமணன் ஆகிறுன். எத்தகைய பாங்குடையவன் பிராமணன் ஆகிறுன் என்னும் கோட்பாடு பகவத்கீதையில் 18-ஆம் அத்தியாயம் 42-ஆம் சுலோகத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. அந்த விளக்கத்தில் ஆஸ்திக்யம் என்பது மிக முக்கியமானது. தன்னைத் தெய்வம் காப்பாற்றுகிறுர் ஆதலால் தன்னுடைய தேக சம்ரக்ஷணையைப்பற்றி இம்மியளவும் எண்ணுதிருப்பவன் பிராமணன் ஆகிறுன். இதற்கு நேர்மாறுகப் பாடுபட்டுச் சம்பாதித்து உடலைப் பேணுதலிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பவன் சூத்திரனுகிறுன். பிராமணனுக்கு விளக்கம் மகாபாரதத்தில் வந்துள்ளது.

येनकेन चिदाच्छन्नो येनकेनचिदाशितः
यत्रकचनशायी स्यात्तन्दे वा ब्राह्मणंविदुः

தற்செயலாய் வருகிற பொருளைக்கொண்டு திருப்தி அடைகிறவனும், வீடு இல்லாது இருப்பவனும், உடல் சம்ரக்ஷணையைப்பற்றிக் கவலைப்படாதிருப்பவனும் பிராமணன் எனப்படுகிறுன். ஆக ஆத்மபரிபாகத்திலே உச்ச நிலையை எட்டியிருப்பவன் பிராமணன். அவன் பூசுரன் அல்லது மண்ணுலகில் வாழும் விண்ணவன் எனப் பகரப்பெறுகிறுன். அத்தகையவனைக் காண்பது தெய்வத்தைக் காண்பதற்கு நிகர். அதே பாங்கிலுள்ள பெண்பால் ஒருத்தியை ப்ராமணி அல்லது மகாதேவியாகப் பாராட்டுவது பொருந்தும். பண்டைக்காலத்தில் அனசூயை அத்தகைய பாங்கு படைத்திருந்தாள். இதிகாச காலத்தில் சீதையும்

ராதையும் அத்தகைய பாங்கு படைத்திருந்தார்கள். அதன் பிறகு தோன்றிய ஆண்டாள், காரைக்கால் அம்மையார், மீராபாய் ஆகியவர்கள் தெய்விகப் பண்பாட்டின் உச்சநிலையை எட்டியவர்கள். அன்னவர்கள் மயமாக அம்பிகை இருப்பதால் அவள் பிராம்மணி எனப் போற்றப் பெறுகிருள். பரமஹம்சதேவருக்கு முதல் குருவாக வாய்த்தவர் பைரவி பிராமணி என்னும் பெண்பால் ஆவார். பிராம்மணி என்னும் சொல்லுக்கு இலக்காக அவர் இலங்கினர். அவருடைய மேனி அமைப்பும், அழகும் உச்சநிலை யெய்தியிருந்தன. ஞானக் கடல் என்று அவரைக் கூறுவது முறை. தியாக வாழ்வின் மகிமை அவரிடம் மிளிர்ந்தது. பர ஞான அனுபூதியின் எல்லையை எட்டியவர். பரதேவதை மானுட வடிவெடுத்து வந்தால் என்னென்ன மகிமைகளெல்லாம் ஒன்று கூடி ஒளிருமோ அவையாவுக்கும் இருப்பிடமாக இம்மாதரசி இருந்தார்.

675. ब्राह्मी ப்ராஹ்மீ — சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவனுடைய சக்தியாகிய சரஸ்வதி சொருபமாயிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள். சரஸ்வதியின் சாந்நித்யம் சர்வகாலமும் சமுதாயத்தில் இருந்து வருகிறது. ஒருகாலத்தில் அது ஓங்கியிருக்கலாம். மற்றொருகாலத்தில் அது மழுங்கியிருக்கலாம். ஆனல் சரஸ்வதியின் சாந்நித்தியம் அறவே எக்காலத்திலும் அழிந்துபட்டுப் போவதில்லை. கலைமகள் எனவும் நாவுக்கு அரசி எனவும் அவள் இயம்பப்பெறுகிருள். எங்கெல்லாம் கலை ஓங்கியிருக்கிறதோ ஆங்கு அவள் சாந்நித்தியம் வெளிப்படையாகிறது. அக்கலையைத் தெளிந்த சொல்லோவியமாகவிளக்குங்கால் அவளுடைய சாந்நித்தியம் மேலும் வெளிப்படையாகிறது. ஆங்காங்கு பல படித்தரங்களிலிருக்கும்ஆடவர் மகளிர் ஆகிய இருபாலார்களுடைய நாவிலும் அவள் வீற்றிருந்து கொண்டு கலைகளை வெளிப்படுத்துகின்ருள். சரஸ்வதியின் மேனி, ஆடை, இருப்பிடமாகிய தாமரை ஆகிய இவையாவும் வெண்மை நிறம் படைத்திருப்பதில் பொருள் மிக உண்டு. நிறங்களுள் வெண்மை தூய்மைக்கு எடுத்துக் காட்டாகிறது. மனத் தூய்மை வாய்ப்பதற்கேற்பக் கலைமகளுடைய அருளுக்குப் பாத்திரமாகலாம் என்பது கோட்பாடு. கலையின் உச்சநிலையாக அம்பிகை யாண்டும் மிளிர்ந்து கொண்டிருப்பதால் அவள் ப்ராஹ்மீ என்னும் பெயர் படைத்துள்ளாள்.

676. ब्रह्मानन्दा ப்ரஹ்மானந்தா — பிரம்மானந்த சொருபமாயிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

எங்கெல்லாம் ஆனந்தம் மலினப்படாது மேன்மையுற்றுஓங்கியிருக்கிறதோ அந்த ஆனந்தம் பிரம்மானந்தம் எனப்படுகிறது. பிரம்மம் நிறைபொருள். பிரம்மத்திற்குப் புறம்பாக யாண்டும், ஏதும் இல்லை. தூய மனம்படைத்திருக்கிறவர்கள் இப்பிரபஞ்சத்தைத் துருவி யாராய்ந்து பார்த்தால் அதன்கண் பிரம்மானந்தமே பொலிந்து கொண்டிருப்பது புலப்படும். ஆனந்தம் பிரம்மம் என்னும் உபநிஷத் வாக்கியத்தை ஒரு மகா வாக்கியமாகக் கருதலாம். ஏனென்றல் பேருண்மைக்குப் பெரு விளக்கமாக இந்த வாக்கியம் அமைந்திருக்கிறது. நாம ரூபத்தில் ஆனந்தம் பொலிகிறது. நாமரூபத்துக்கு அதீதத்தில் ஆனந்தம் பொலிகிறது. ஆனந்தமே யாண்டும் நிலைத்திருக்கிறது. ஆனந்தத்தை அறியாத உயிர் இல்லை. ஆனந்தத்தில் நிலைபெருத உயிர் இல்லை.

இப்பிரபஞ்சத்தில் துக்கம் ஏராளமாக நிறைந்திருக்கிறது. எங்குத் துக்கம் இருக்கிறதோ ஆங்கு ஆனந்தம் இல்லை. ஆதலால் துக்க சாகரத்தில் பிரம்மம் இல்லை. பிரம்மம் ஓரிடத்திலிருந்தும் மற்றோரிடத்தில் இல்லாமலும் போவதால் அது நிறைபொருள் ஆகாது என்னும் ஆட்சேபம் வரலாம். துக்கத்தைச் சரியாக அறிந்துகொண்டவர்கள் அந்த ஆட்சேபத்தை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். துக்கம் என்பது உண்மையில் ஆனந்தத்தின் எதிர்மறைத் தோற்றமாம். இருளை வெளிச்சத்தின் எதிர்மறைத் தோற்றம் என்கின்றோம். உண்மையில் இருள் இருள்தான என்கிற கேள்வி பிறக்கிறது. நமக்குக் கட்புலனுகாத கார் இருளில் ஆந்தையும் புலியும் நண்பகல் வெளிச்சத்தைக் காண்கின்றன. ஆதலால் இருள் என்பது வெளிச்சத்தினுடைய ஒருவித நிலையாம். அதே பாங்கில் துக்கம் என்பது பேரானந்தத்தின் ஒருவித நிலையாம். பக்த ராஜனுகிய பிரஹலாதன் பெருந் துயரத்திற்கு

ஆளாக்கப்பட்டான். அதேவிதத்தில் திருநாவுக்கரசராகிய அப்பர்சுவாமிகளும் மதம் மாறி வந்ததை முன்னிட்டுச் சித்திரவதைக்கு ஆளானர். துக்கமாகத் தென்பட்ட அந்நிலையிலும் அவர் 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என இயம்பினர். அதே பெருநிலையில்தான் பிரகலாதனும் இருந்தான். துக்கத்தில் வருந்தும் எண்ணிறந்த ஜீவகோடிகள் பிரம்மானந்தத்தை எதிர் மறையில் விளக்கிக்கொண்டிருக்கிறார்கள் என்பது ஞானிகளுக்குத் தேற்றம். தோன்றியுள்ள யாவும் தோற்றத்திற்கு அப்பால் இருப்பதும் பிரம்மானந்தமே. அந்தப் பிரம்மானந்த மயமாக அம்பிகை இருப்பதால் அவளுக்கும் அதே நாமம் வந்துள்ளது. அக்னியிலிருந்து எங்ஙனம் உஷ்ணத்தைப் பிரிக்க முடியாதோ அங்ஙனம் பிரம்மத்தினின்று சக்தியைப் பிரிக்க முடியாது. பிரம்மத்திற்குக் கொடுக்கிற அதே அடைமொழியை அம்பிகைக்கும் வழங்கலாம். மனதற்ற நிலையில் ஜீவர்கள் அனைவருக்கும் பிரம்மானந்தம் தானாகத் திகழுகிறது. அந்தப் பிரம்மானந்தத்தில் லயித்திருந்து பழகுதல் நல்ல அம்பிகை வழிபாடு ஆகிறது.

677. **बलिप्रिया** பலிப்ரியா—நிவேதனத்திலோ பேராற்றலிலோ பிரியம் வைத்திருப்பவள் என்பது இந்த நாமத்தின்பொருள்.

எங்கெல்லாம் மமகாரம் ஒதுக்கப்படுகிறதோ ஆங்கெல்லாம் அம்பிகையின் சாந்நித்தியம் திகழுகிறது. கோயிலுக்குள்ளே நுழையும் பொழுது அங்கு வழிபாட்டுக்குரிய முதலிடமாக அமைந்திருப்பது பலிபீடம். வழிபடுகின்றவன் அவ்விடத்தில் வீழ்ந்து தெய்வத்தை வணங்கவேண்டும். வணங்குகிற பொழுது அவன் தன் சிறுமைகளையெல்லாம் அதில் பலிகொடுக்கவேண்டும். ஞானியர்கள் மானசபூஜையில் 'துள்ளும் அறியா மனது பலிகொடுத்தேன்' என்று சங்கல்ப்பம் பண்ணுகிறார்கள்.

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்

என்பது மறைமொழி. 'தியாகேனைகே அம்ருதத்துவமானஸு' என்பதும் வேதவாக்கு. பலி கொடுப்பதில் அல்லது தியாகம் பண்ணுவதில் அகங்கார மமகார தியாகத்துக்கு நிகரான தியாகமில்லை. ஆத்ம சாதகனொருவன் தன்னுடைய ஜீவிதத்தை அம்பிகை வழிபாட்டுக்காக வென்று பலிகொடுப்பதற்கு நிகரான நிவேதனம் வேறு ஏதுமில்லை. நிலையற்றவைகளை ஒதுக்குதற்கேற்ப ஆத்மசாதகன் அக்கணமே ஆனந்தத்துக்குச் சொந்தமாகிறான். நிலையற்றவைகளை நிலையுற்றவைகளாகப் பற்றிப் பிடித்துக் கொண்டிருக்கும் ஆத்மாவை ஜீவாத்மன் என்கிறோம். ஜீவாத்மன் ஒருவன் தன்னுடைய ஜீவவியக்தியை அம்பிகைக்குப் பலி கொடுப்பானாகில் அதில் அவள் பேரானந்தம் அடைகின்றாள். பலிகொடுக்கிற ஜீவனும் அக்கணமே பேரானந்தத்துக்குச் சொந்தமாகிறான். இத்தனைகோடி ஜீவர்கள் உயிர் வாழ்ந்திருப்பதெல்லாம், தங்களை இறுதியில் அம்பிகையிடம் ஒப்படைத்தல் பொருட்டேயாம். அஞ்ஞானத்தின் விளைவாகத் தங்களை அம்பிகைக்குப் புறம்பானவர்களாகக் கருதுவதால் அல்லலுக்கு ஆளாகிறார்கள். ஜீவர்கள் உண்மையில் தங்களுக்குச் சொந்தமல்லர்; அம்பிகைக்கே சொந்தமாகின்றனர். அலை எங்ஙனம் கடலுக்குச் சொந்தமோ அங்ஙனம் ஜீவர்களனைவரும் அம்பிகைக்குச் சொந்தம். அந்தச் சொந்தத்தைச் செயல்படுத்துவது பலி அல்லது நிவேதனமாகிறது. அச்செயல் அம்பிகைக்குப் பரம திருப்தியை உண்டுபண்ணுகிறது.

பலி என்னும் சொல் பலம்படைத்தவன் எனப் பொருள்படுகிறது. உயிர் வகைகளைப் பற்றிய கோட்பாடு ஒன்று உண்டு. பலம் படைத்ததே வாழ்க்கைக்குத் தகுதி உடையதாகிறது. பலஹீனமாவது அழிந்துபட்டுப் போவதற்கு நிகர். 'நாயமாத்மா பலஹீனேன லப்ய' என்பது உபநிஷத் வாக்கியம். பலம் படைத்தவனே ஆத்ம ஞானத்திற்குத் தகுதி உடையவனாகிறான். Strength is life; weakness is death. வலிவு வாழ்வை நல்குகிறது. மெலிவு மரணத்தை வரவழைக்கிறது என விவேகானந்த சுவாமிகள் விளக்கியுள்ளார். ஆக வாழ்க்கைத் திட்டங்கள் பலவற்றுள் மானுடனொருவன் பலவானாகப் பரிணமித்து வருவானாகில் அவன் வாழ்க்கைத் திட்டத்தை நன்கு நிறைவேற்றுபவனாகிறான். இங்ஙனம் ஆத்ம சாதகன் ஒருவன் தன்னை யாண்டும் பலப்படுத்திக்கொண்டு வருவானாகில் அது அம்பிகைக்குப் பரமதிருப்தியை உண்டுபண்ணுகிறது. பலவானாவது நல்ல அம்பிகை வழிபாடு ஆகும்.

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (162) புலால் உண்பது பாபம் என்கிறீர்கள். பால் அருந்துகின்றோம். அது பாபம் அன்றோ? செடிகொடிகளைக் கொல்லுவது பாபம் அன்றோ?

எது பொருந்திய செயல், எது பொருந்தாத செயல் என்பதை நிர்ணயிப்பதற்கு இயற்கையின் நடைமுறையே ஒப்பற்ற பிரமாணம் ஆகிறது. இயற்கையின் நடைமுறையும் இறைவனுடைய திட்டமும் ஒன்றே.

உலகிலுள்ள உயிர்வகைகளத்தனையும் உணவு உண்டு உயிர் வாழ்ந்து வருகின்றன. உணவு உண்ணுது எவ்வுயிரும் ஜீவித்திருக்க முடியாது. அடுத்தபடியாக உணவு என்றால் என்ன என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும். வெறும் மணல் பரப்பில் பயிர் பச்சைகள் விருத்தியடைய மாட்டா. வளம் நிறைந்த மண் அவைகளின் வளர்ச்சிக்குத் தேவை. வளம் என்பது மண்ணில் அமைந்துள்ள (Bacteria) பாக்டீரியா என்னும் உயிர்த்தத்துவமேயாம். ஓரிடத்தில் செங்கல் காளவாய் வைத்துத் தரையின்மீது ஏராளமான உஷ்ணத்தைச் செலுத்தினுல் அத்தரை தீய்ந்து போகிறது. அதாவது அதிலுள்ள பாக்டீரியா என்னும் உயிர்தத்துவம் வெந்து போகிறது. அதன் விளைவாக அவ்விடத்தில் செடி கொடி ஏதும் வளராது. உயிர்த்தத்துவத்தைப் புசித்தே உயிர் வகைகள் வாழ்ந்துவருகின்றன என்பது இயற்கையைப் பற்றிய கோட்பாடு ஆகும். எப்படி எண்ணெய் இல்லாது தீபம் எரியாதோ அப்படி மற்றோர் உயிரை உணவாக்காது எவ்வுயிரும் வாழ்ந்திருக்க முடியாது. உயிர் வகைகளை ஸ்தாவரம், ஜங்கமம் என இருவகையாகப் பிரிக்கிறோம். ஆனுல் ஓர் உயிர் மற்றோர் உயிருக்கு உணவாக மாறியமையும் கோட்பாட்டில் ஸ்தாவரம் ஜங்கமம் என்னும் பாகுபாடு இல்லை. சில செடி கொடி தழைகளை வேறு சில பயிர் பச்சைகளுக்கு எருவாகப் போடுகிறோம். அங்கு ஸ்தாவரமே ஸ்தாவரத்திற்கு உணவாகிறது. பிறகு செடி, கொடி, பயிர்பச்சை இலை தழை முதலியவைகளைத் தின்று ஜங்கமமாயுள்ள பறவை, விலங்கு, மக்கள் ஆகியவைகள் உயிர் வாழ்ந்து வருகின்றன. ஜங்கமமாயுள்ள பறவை, விலங்கு, மக்கள் ஆகியவைகளின் உடல்கள் ஸ்தாவரத்திற்கு நல்ல எரு ஆகின்றன. அந்த உடலங்களைப் புசித்து நடப்பன பறப்பன, நீந்துவன ஆகிய உயிர் வகைகளனைத்தும் வாழ்ந்து வருகின்றன. இயற்கையில் எங்குத் திரும்பி எந்த உயிரை ஆராய்ந்து பார்த்தாலும் அது மற்ற உயிர்களைத் தனக்கு இரையாக்குவதே இயற்கையின் கோட்பாடாகிறது. தனக்குப் புறம்பாயுள்ள உடல்களை எடுத்து உணவாக்காது எவ்வுயிரும் வாழ்ந்திருக்க முடியாது. தானிய வகைகளுள் ஒவ்வொரு தானியமும், அரிசியும் தனித் தனி உயிர்த் தத்துவமாகிறது. இயற்கையின் நடைமுறை இங்ஙனம் இருக்கையில் கொலை மறுத்தல் என்னும் கோட்பாடு வெறும் கொள்கையளவிலேயாம். ஜங்கம உயிர் எதையும் கொன்று தின்னுது ஸ்தாவர உணவைக் கொண்டே மனிதன் உயிர் வாழ்ந்திருக்க முடியும். அப்படிச் செய்வதால் அவன் கொலை மறுத்தவனுகமாட்டான். அரிசி வகைகள், பருப்பு வகைகள், கீரை, காய்கறிவகைகள் ஆகிய யாவும் உயிர்த்தத்துவங்களேயாம். அவைகளை நேராகவோ, சமைத்தோ புசிப்பதின் வாயிலாகவே மனிதன் உயிர் வாழ்ந்து வருகிறான். இனிப் பருகுகிற நீரிலே உயிர்த்தத்துவம் உண்டு. சுவாசிக்கிற காற்றிலே உயிர்த்தத்துவம் உண்டு. நீரைப்பருகாது, காற்றைச் சுவாசிக்காது மனிதன் எங்ஙனம் உயிர்வாழ முடியும்? மனிதன் நடக்கிறபொழுது அவனுல் மிதியுண்டு சிற்றுயிர்கள் நாள்தோறும் அழிகின்றன. சமையல் அடுப்பில் பூச்சிவகைகள் வீழ்ந்து மடிகின்றன. அச்செயலையும் மனிதன் தவிர்க்க முடியாது. இயற்கையின் அமைப்பைப் பற்றிய உண்மையொன்று இப்பொழுது நமக்கு வெளியாகிறது. உலகில் வாழவந்துள்ள உயிர் வகைகளனைத்தும் ஒன்றை ஒன்று உணவாக்கியே வாழ்ந்து வருகின்றன. கொஞ்சகாலம் வாழ்ந்திருக்கும் உயிர் பிறகு மற்ற உயிர்வகைகளுக்கு உணவாகிறது. இந்த ஏற்பாட்டைத் தவிர்க்கவோ, மாற்றியமைக்கவோ யாருக்குமே இயலாது.

சீலத்திலும், நல்லொழுக்கத்திலும், ஆத்மீக வளர்ச்சியிலும் முன்னேற்றமடைய விரும்புகிறவன் உணவு நியதியைக் கையாளக் கடமைப்பட்டிருக்கிறான். மானுட சரீரத்துக்கு மாமிச உணவு, மரக்கறி உணவு ஆகிய இரண்டுவித உணவு வகைகளும் தேவை. அவைகளுள் மாமிச உணவு ரஜோ குணத்தை வளர்க்கிறது. மாமிசத்தை விலக்கிவைத்துவிட்டுப் பால், தயிர், நெய்வகைகளைப் புசிப்பது மேலானது. பாலும், மாமிச உணவிற்கு நிகரென்றாலும் அது மாமிசத்தைவிடத் தூயதாக அமைந்திருக்கிறது. உணவு உண்பதில் பாபம் புண்ணியம் என்னும் கோட்பாட்டுக்கு இடம் இல்லை. பொருந்திய உணவு எது? பொருந்தாத உணவு எது? என்ற கோட்பாட்டுக்கே இடம் உண்டு. ஆத்மசாதனத்தில் ஈடுபடுகிறவர்களுக்கு மரக்கறி உணவு வகைகளிலும் விலக்கிவைப்பதற்கானவைகள் சில உள. தமோகுணத்தையும், ரஜோ குணத்தையும் வளர்க்கிற உணவுவகைகளை ஒதுக்கிவைப்பது உசிதம். ஆத்ம சாதனங்களில் தீவிரமாக ஈடுபடுகிறவர்களுக்கு ஆகார நியதி முற்றிலும் அவசியமானது. ஆத்மசாதனத்தில்ஈடுபடாது வெறும் உலகவாழ்விலேயே உழன்று கொண்டிருப்பவர்களுக் கிடையில் உணவு நியதியை வற்புறுத்துதவில் பொருள் இல்லை. அன்னவர்களும் ஆத்மசாதனத்தில் ஈடுபடுவதற்கான பரிபாகம் ஒன்று உண்டு. அப்படி ஆத்மசாதனத்தில்ஈடுபடுகிறவர்கள் தாமாகவே தமக்குப் பொருந்தாத புலால் உணவு போன்றவைகளை விலக்கிவைத்துவிடுவார்கள். இதுவே உணவு நியதிபற்றிய கோட்பாடாம்.

கேள்வி: (163) *முன் செய்த தீவினையை இப்போது அனுபவிக்கின்றோம். பெரிய தண்டனையாக மரணமும் நேர்கின்றது. மறுபடியும் ஏன் துன்பம் வரவேண்டும்?*

முன் செய்த தீவினையை மட்டுமல்ல, நல்வினையையும் இப்போது அனுபவிக்கின்றோம். வினைக்கேற்ற வினைப்பயன் நெறி பிறழாது நிகழ்ந்து வருகிறது. நல்வினையின் விளைவு இன்பம். தீவினையின் விளைவு துன்பம். இன்பத்தையும் துன்பத்தையும் மாறி மாறி அனுபவித்து வருவதே இவ்வையக வாழ்வின் விளைவு ஆகும். துன்பம் கலவாத இன்பத்தை இவ்வுலகில் யாருமே அனுபவிக்க முடியாது. வாய்க்கின்ற இன்ப துன்பங்களின் வாயிலாக ஜீவாத்மன் படிப்படியாகத் தன்னைப் பண்படுத்தி வருகிறது. இன்பத்தினின்றும் துன்பத்தினின்றும் பாடங்கள் பல ஜீவாத்மனுக்கு வாய்க்கின்றன. இன்பத்தின் வாயிலாகப் பெறுகிற பாடத்தை விடப் பெரியதாயிருப்பது துன்பத்தின் வாயிலாக வருகிற பாடமாம். அப்படிப் பாடம் பயின்று வருகிற ஜீவாத்மனுக்கு அமைந்துள்ள உடல் சாசுவதமானதன்று. பிராரப்த கர்மம் பூர்த்தியானதும் அதன் விளைவாக வாய்த்த உடல் மடிந்து பட்டுப் போகிறது. உடல் அழிவதைப் பெரிய தண்டனை என்று பகரலாகாது. அணிந்திருக்கிற சட்டை கிழிந்துபோனால் அதைத் தண்டனை என நாம் பொருள்படுத்துவதில்லை. நஷ்டம் என்றும் அதை நாம் கருதுவதில்லை. பயன்பட்டு வருகிற பழைய சட்டை எப்படி இயல்பாகக் கிழிந்து போகிறதோ அப்படி ஒரு பிறவியில் எடுத்த உடலுக்கு ஏதுவாயிருந்த வினையின் வேகம் தணிந்தவுடன் அது வீழ்கிறது. அதன் பிறகு அந்த ஜீவாத்மன் அனுபவிப்பதற்கு வேண்டிய கர்மபலன் ஏராளமாக இருக்கிறது. அதற்காகவென்று அடுத்த பிறவியை அந்த ஜீவாத்மன் எடுத்துக்கொள்ளுகிறது. ஆக, உலகின் வாயிலாக வருகிற ஜனனத்தையும், மரணத்தையும் தண்டனை என நாம் பொருள் படுத்தலாகாது. தேவைக்கு ஏற்றபடி சட்டைகள் ஒன்றன்பின் ஒன்றாக மாறி மாறி வருவதுபோன்று சரீரங்களும் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்துகொண்டேயிருக்கின்றன. வினையும் வினைக்கேற்ற விளைவும் ஒழுங்காக நடைபெற்று வருகின்றன. பல பிறவிகளுக்குப் பிறகு உடல் வாழ்க்கையிலும் வினைப்பயனிலும் சலிப்புத் தட்டுகிறது. உடல் வாழ்க்கை வேண்டாம் என்னும் விரக்தி மேலோங்குகிறது. பற்றற்ற நிலையே விரக்தி எனப்படுகிறது. பண்பட்ட அந்த ஜீவாத்மன் பிறகு பக்தியிலும் ஞானத்திலும் கருத்தைச்செலுத்தி எஞ்சியிருக்கிற வினைகளையெல்லாம் ஒதுக்கித் தள்ளுகிறது. முக்தி அல்லது வீடுபேறு என்னும் முடிந்த நிலையை அந்த ஜீவாத்மன் எட்டுகிறது. பரத்தில் அது ஒன்றுபடுகிறது. இதுவே வாழ்க்கையின் திட்டமாதலால் தண்டனை என்னும் கருத்து எழ இடமில்லை.

---

# ஸ்ரீ விவேகானந்தர் தந்த லக்ஷியங்கள்

(சுவாமி ஆத்மானந்தர்)

உலகின் சிந்தனைசக்திக்குப் புதியதோர் ஆன்மீக உத்வேகத்தைத் தருகின்ற குழந்தை ஒன்று நூறுண்டுகளுக்கு முன்னர் கல்கத்தா நகரில் தத்தர் குடும்பமொன்றில் பிறந்தது. நரேந்திரநாத் தத்தர் என்ற பிள்ளைத்திருநாமம் பூண்ட அக்குழந்தையைத்தான் பிற்காலத்தில் சுவாமி விவேகானந்தர் என்று உலகம் போற்றியது. பண்பாட்டின் திருவுருவமாய் விளங்கிய பெற்றோர்களால் நரேந்திரன் போற்றி வளர்க்கப்பட்டான். தாயின் மடியில் அமர்ந்து கொண்டு இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களை இசையோடு காவிய ரூபமாகப் பருகினான். உரிய வயதில் கற்கவேண்டிய கல்வியும் அவனுக்குப் போதிக்கப்பட்டது. இளமை முதலே கட்டழகும், திண்ணிய உடற்கட்டும், நுண்ணறிவும், நல்லொழுக்கமும் மிக்க இளைஞனாக விளங்கிய நரேந்திரன், தன்னையொத்த இளைஞர்களுக்கு ஓர் லக்ஷியபுருஷனாய் விளங்கினான். மன ஒருமுகப்பாடும், தியானத்தில் ஈடுபாடும் அவனுக்குப் பிறப்புரிமைகளாய்க் கிடைத்த கடவுளின் வரப்பிரசாதங்களாகும். கல்லூரியில் கற்கின்ற காலத்தில் தான் சந்தித்த பெரியவர்களிடத்திலெல்லாம் அவன் கேட்ட பாரமார்த்திகக் கேள்வி; 'நீர் கடவுளைக் கண்டதுல்டா?' என்பதுதான். ஆனால் இக்கேள்விக்குப் பொருத்தமான விடை எவரிடத்திருந்தும் கிடைக்கவில்லை. 1881 ஆம் ஆண்டு ஒரு நாள் பகவான் ராமகிருஷ்ணரிடத்தும்; 'நீர் கடவுளைக் கண்டதுண்டா?' என்ற அதே கேள்வியைக் கேட்டான். அதற்கு ஸ்ரீராமகிருஷ்ணர் விடுத்த பதிலாவது: "ஆம் குழந்தாய், நான் கடவுளைக் கண்டிருக்கின்றேன். இடையறுது கண்டுகொண்டும்இருக்கின்றேன். ஊனக்கண்கொண்டு உன்னை நான் காண்பதைவிடப் பன்மடங்கு தெளிவாக எனது ஞானக்கண்ணுல் அவரைக் காணுகின்றேன். உனக்கும் காட்டுவேன்.'' பகவான் ராமகிருஷ்ணரது மறுமொழி நரேந்திரனை வியப்பில் ஆழ்த்தியது. இந்த நிகழ்ச்சியானது நரேந்திரனது வாழ்வில் பெரிய திருப்பமாக அமைந்தது. இப்பெரியவரது அருளினல் கடவுள் காட்சியைப் பெறலாம் என்ற பேரார்வமும் அவனது உள்ளத்தில் பெருகிற்று.

அண்ட பகிரண்டமும் அடங்காத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டால் கதியாம் பராபரமே

என்பதன்றே தாயுமானவர் திருவாக்கு.

நரேந்திரர் அடிக்கடி ஸ்ரீ ராமகிருஷ்ணரைச் சந்திக்கச் சென்ருர். ஸ்ரீராமகிருஷ்ணரது எல்லையற்ற ஆன்ம சக்தியினல் கவர்ந்திழுக்கப்பட்டார். குருதேவரது கள்ளங்கபடமற்ற குழந்தை உள்ளமும், காமகாஞ்சனத்தை முற்றத் துறந்த அப்பழுக்கற்ற முழுத்துறவும், சாஸ்திரங்களின் உட்பொருளைப் பாமரரும் புரிந்துகொள்ளும்வண்ணம் எளியமுறையில் எடுத்துப்புகட்டிய போதனுமுறையும், மனிதனது மனபரிபாகத்தை உள்ளபடியறியும் தீர்க்கதரிசனமும், இவையாவற்றிற்கு மேலாக அவரது கடலனைய அன்பும், பூமியனைய பொறுமையும் நரேந்திரரை அவர்பால் கவர்ந்திழுத்தன. ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய ஸ்பர்சமானது நரேந்திரரைப் புறவுலக நினைவை அடியோடு இழக்கும்படி செய்தது. ஜீவபோதத்தை இழந்து பரபோதத்தில் ஆழ்த்தியது. இந்த நிகழ்ச்சியானது பகவான் ராமகிருஷ்ணரது தபோபலத்தையும், அதை ஏற்றுக்கொண்ட நரேந்திரரது மனபரிபாகத்தையும் நமக்குக் காட்டித்தருகிறது. சரீரத்தைத் தொட்ட மாத்திரத்தில் ஒருவனுக்குக் கடவுட்காட்சியைக் காட்டக்கூடிய பகவான் ராமகிருஷ்ணரிடத்து நரேந்திரர் தம்மைப் படிப்படியாக ஒப்படைத்ததில் வியப்பொன்றுமில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரரை ஆட்கொண்டார். நரேந்திரரும் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தமது குருவாக ஏற்றுக்கொண்டார். இருவரும் குரு சிஷ்ய லக்ஷணத்துக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்கினர். குருதேவரின் திருவடியின் கீழிருந்து நரேந்திரர் ஆத்மசாதனம் புரியலானர். நரேந்திரர் மனத்தகத்து ஆன்மீக சம்பந்தமான ஐயப்பாடுகள் பல குடிகொண்டிருந்தன. குருதேவரிடத்துத் தமது மனதை முற்றிலும் திறந்து காண்பித்தார். அவருடைய மனத்தகத்திருந்த ஐயப்பாடுகள்

அனைத்தும் அகற்றப்பட்டன. ஹிந்து சாஸ்திரங்கள் புகட்டுகின்ற எல்லாவிதமான வழிபாட்டு முறைகளையும் அவர் ஏற்றுக்கொண்டார். இறைவன்தான் இத்துணையுமாய் இருக்கின்றார் என்ற உண்மையினையும் அவர் ஒப்புக்கொண்டார். கடவுள் ஏககாலத்தில் அருவமாகவும், உருவமாகவும் இருக்கின்றார் என்பதையும் அனுபூதியில் உணரலானார். இங்ஙனம் கல்லூரி மாணாக்கராக இருந்த நரேந்திரர் கடவுள் பணிக்காகத் தம்மைத் தயார் படுத்திக்கொண்டிருந்தார்.

இந்நிலையில் நரேந்திரருடைய தந்தையார் திடீரெனக் காலமாகிவிடுகின்றார். குடும்பமோ மிகக்கொடிய வறுமைக்கு உள்ளாகிவிடுகின்றது. குடும்பபாரம் அனைத்தும் நரேந்திரர்பால் விழுகின்றது. ஆயினும் நரேந்திரருடைய அருள்தாகத்தை என்னென்பது! ஈன்றெடுத்த தாயும், உடன் பிறந்த சகோதர சகோதரிகளும் உண்ண உணவும், உடுக்க உடையும் இன்றி வாடும்போதும், அம்பிகையினிடத்து உலகப் பொருட்களைப் பிரார்த்திக்க அவர் மனம் மறுத்துவிடுகின்றது. திரும்பத் திரும்பக் குருதேவரே அம்பிகையின் சந்நிதிக்கு மும்முறை அனுப்பிவைத்தும் உலகப் பொருட்களைப் பிரார்த்திக்க நரேந்திரரால் இயலவில்லை. பக்திக்காகவே பக்தி செய்கின்ற அவரது பகவத் பக்தியின் பெருமையினை என்னென்பது!

கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்

என்பதன்றோ தெய்வச் சேக்கிழாரின் திருவாக்கு.

1886 ஆம் ஆண்டு பகவான் ராமகிருஷ்ணர் மகாசமாதி அடைந்தார். நரேந்திரரும் அவருடைய சகோதர சீடர்களும் வராஹநகர் என்னும் இடத்தில் பாழடைந்த கட்டடத்தை வாடகைக்கு அமர்த்தி அங்கே கூடி வாழ்ந்தனர். குருதேவருடைய திருவுருவப் படத்தை வைத்து முறையாக வழிபாடியற்றினர். அங்குதான் பகவான் ராமகிருஷ்ணருடைய பெயரால் முதல் மடம் ஸ்தாபிக்கப்பட்டது எனலாம். குருதேவருடைய போதனைகளின்படி ஆத்ம சாதனத்தில் அவர்கள் ஆழ்ந்து மூழ்கினர். அந்நாட்களில் அவர்களுக்கு வந்த கஷ்டங்களும் இடையூறுகளும் பலப்பலவாம். உண்ண உணவும், உடுக்க உடையுமின்றி இருந்த நாட்களுமுண்டு. மடத்தில் பெரும்பாலோர் கோவணதாரிகளாய்த்தான் இருந்தனர். எல்லாருக்கும் பொதுவாக ஒரே ஒரு உடைதான் இருந்தது. வெளியூர் செல்லுவோர் அதை அணிந்துகொண்டு செல்லுவார். பொருட் செல்வமின்றி வாழ்ந்த அந்த இளைஞர்கள் அருட்செல்வத்தில் மூழ்கித் திளைத்தனர். தவமே வடிவெடுத்ததாக இருந்தது அத்தூய இளைஞர்களுடைய வாழ்வு. நாள் முழுதையும் ஜப தபங்களிலும், பஜனை பாராயணங்களிலும், தத்துவ ஆராய்ச்சியிலுமே கழித்தனர். ஊணையும் உடலையும் மறந்து கடவுள் தியானத்திலே மூழ்கிக்கிடந்தனர். அந்நாளில் அவர்கள் செய்த கடுந்தவம்தான் இன்று உலகம் முழுதும் ராமகிருஷ்ண இயக்கத்துக்கு அருட்சக்தியை ஊட்டி வருகின்றது.

1886 ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் தினத்தன்று அவர்களனைவரும் சந்நியாசத்தை மேற்கொண்டனர். நரேந்திரர் சுவாமி விவேகானந்தரானார். ஓரிருவருடங்கள் கழிந்தன. சுவாமி விவேகானந்தர் பரிவ்ராஜகராகக் கிளம்பத் திட்டமிட்டார். இமயம் முதல் குமரிவரையிலும் பெரும்பாலும் கால்நடையாகவும், சிற்சிலசமயம் புகைவண்டியிலுமாக யாத்திரை செய்தார். அந்த யாத்திரையானது இந்தியாவை உள்ளபடி அறிதற்கு அவருக்கு உதவியது. தாய்நாட்டின் அவல நிலையைக் கண்கூடாகக் கண்டறிந்தார். பாழ்பட்டுக்கிடந்த பாரதத்தை வாழ்விக்கவேண்டுமென்ற திடசங்கல்பம் கொள்ளலானார். தாய்நாட்டின் முன்னேற்றத்துக்கான திட்டங்களைத் தீட்டலானார்.

1893 ஆம் ஆண்டு செப்டம்பர் 11ஆம் தேதி அமெரிக்காவில் சிகாகோ நகரில் சர்வமத மகாசபை நடந்தது. அதில் சுவாமி விவேகானந்தர் ஹிந்து மதத்தின் பிரதிநிதியாகக் கலந்துகொண்டார். கற்றறிந்த ஆடவர்களும் மகளிர்களும் ஆயிரக்கணக்கானோர் கூடியிருந்த அச்சபையில் சுவாமிகள் பேசத் தொடங்கினர்: "அமெரிக்க நாட்டுச் சகோதரிகளே, சகோதரர்களே" என்று அவர் கூறியது அங்கு குழுமியிருந்தோர் உள்ளங்களைக் கொள்ளைகொண்டுவிட்டது. அவர்பேசுதற்கு எழுந்துநின்ற கம்பீர,

மான தோற்றப்பொலிவு அனைவருடைய இத யங்களையும் கவர்ந்திழுக்கவல்லதாய் இருந்தது. ஹிந்து சமயத்தின் பெருமையினையும், சமயங் கள் அனைத்திற்குமிடையில் உள்ள ஒற்றுமை யையும் அவர் எடுத்துப் புகட்டினர். சுவாமிஜி யின் உரை அமெரிக்கருடைய உள்ளங்களைத் தொட்டது. போகவாழ்வில் மூழ்கித்திளைத்து மனவமைதி காணுது அவதியுற்ற அமெரிக்கர் களுக்குச் சுவாமிகளின் வாக்கானது அமுத வாரியாக இருந்தது. அமெரிக்காவில் மூன் ருண்டுகள் தங்கியிருந்து உபந்யாசங்கள் பல செய்தார். அவர் அன்புநிறைந்த நண்பர்களை யும், பண்புமிக்க சீடர்கள் பலரையும் பெற லானர்.

மேநாட்டு மக்களுக்குச் சுவாமி விவேகா னந்தர் வாழ்க்கைத் தத்துவத்தையும், வேதாந் தத்தின் அடிப்படைக் கோட்பாடுகளையும் எடுத்துப் புகட்டினர். மனிதனிடத்துள்ள மகத் தான ஆன்மாதான் அவனது நிஜசொரூபம் என்பதையும், அது தூய்மையும் சுதந்திரமும் உடையது என்பதையும், பிறப்பு இறப்புக்களி னல் பாதிக்கப்படாத அழியாத்தன்மையுடைய தென்பதையும் எடுத்துப் புகட்டினர். பகவான் ராமகிருஷ்ணரைப் பற்றி அவர் அதிகம் பேச வில்லை. ஒரே ஒரு சொற்பொழிவுதான் தமது குருநாதரைப் பற்றி நிகழ்த்தினர்.

மதமாற்றத்தில் சுவாமிகளுக்கு நம்பிக்கை இல்லை. மனிதனை மதம் விட்டு மதம் மாற்ற வேண்டுமென்ற எண்ணமும் அவரிடம் இல்லை. கிறிஸ்துவன் ஒவ்வொருவனும் உண்மையான கிறிஸ்துவனுக இருக்க வேண்டுமென்றும், முஸ்லீம் ஒவ்வொருவனும் உண்மையான முஸ்லீமாக இருக்கவேண்டுமென்றும், ஹிந்து ஒவ்வொருவனும் உண்மையான ஹிந்துவாக இருக்க வேண்டுமென்றும் கூறினர். ஒவ் வொரு மதமும் இறைவனை அடைதற்குரிய மிகச் சிறந்த மார்க்கமேயாம். எல்லா மதங் களும் மனிதனை இறைவனிடத்து எடுத்துச் செல்லும் மார்க்கங்களேயாம். தம்முடைய சொந்த மதத்தை அவர் யார்மீதும் திணிக்க முற்படவில்லை. ஒவ்வொருவரும் அவரவருக் குப் பொருத்தமான மார்க்கத்தையே பின்பற்ற வேண்டுமென்று போதித்தார். சுருங்கக்கூறின் மனிதனை மனிதனுக்கும் செய்திகளையே அவர் உலகெங்கும் போதித்தார் என்று கூறவேண் டும். அதனல்தான் உலக மக்கள் அனைவரும் அவருடைய போதனைகளை மதவேறுபாடின்றி ஏற்றுக் கொண்டனர்.

சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவில் இருந்தபொழுது இந்தியாவிலிருந்த தம்மு டைய சகோதர சிஷ்யர்களுக்குக் கடிதங்கள் பல எழுதினர். நாட்டு மக்களை மேம்படுத்து தற்குரிய பல்வேறு திட்டங்கள் அக்கடிதங் களில் அடங்கிக் கிடக்கின்றன. ஒவ்வொரு கடிதமும் சகோதர சிஷ்யர்களின் உள்ளத்தில் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டுவன வாய் இருந்தன. கோடிக்கணக்கான இந்தியர் களின் ஏழ்மையும் அறியாமையும் சுவாமிகளு டைய இதயத்தை உருகும்படி செய்தன. இந்த ஏழை எளியவர்களின் மேம்பாட்டிற்கு ஏதாகி லும் செய்தாகவேண்டும் என்ற ஆழ்ந்த தீர்மா னத்துக்கு வந்தார். அவர் அமெரிக்காச் சென்ற தற்குரிய முக்கிய காரணங்களுள் இந்தியா வின் மேம்பாட்டிற்காக அமெரிக்காவில் நிதி திரட்டவேண்டுமென்பதும் ஒன்ருகும். மூன் ருண்டுகளுக்கு மேல் அமெரிக்காவில் இருந்து விட்டு 1897ல் அவர் தாய்நாடு திரும்பலானர்.

சுவாமி விவேகானந்தர் தாய்நாடு திரும்பு வதற்கு முன்னமேயே அவருடைய வெற்றிச் செய்திகள் நாடு முழுவதும் பரவி விட்டன. நாட்டுமக்கள் அனைவரும் அவருடைய வரவினை ஆவலோடு எதிர்பார்த்திருந்தனர். இலங்கை முதல் இமயம் வரை சுவாமிகளுக்கு மகத்தான வரவேற்புகள் அளிக்கப்பட்டன. நாடாளும் வேந்தனுக்குக்கூட அத்தகைய வரவேற்புகள் அளிக்கப்படவில்லை. சுவாமிகள் சென்ற இடங்களிலெல்லாம் பாரதத்தாயின் தவப் புதல்வர் என்று போற்றப்பட்டார். மக்களு டைய உற்சாகமான வரவேற்பினை ஏற்றுக் கொண்ட சுவாமிகள் நாடு முழுதும் உபந்யா சங்கள் பல செய்தார். அந்த உபந்யாசங் கள் பாரத மக்களைத் தட்டி யெழுப்புவனவாய் இருந்தன. தேச பக்தியும் தெய்வ பக்தியும் அவைகளில் இணைந்து பொலிந்தன. சோம்ப லுற்றுக் கிடந்த இந்தியர்களின் இதயங்களில் புதிய சக்தியைப் பாய்ச்சின. திரும்பத் திரும்ப அவர் நாட்டு மக்களுக்குக் கூறிய தாவது: ‘தேசம் உயிர் வாழ்ந்திருக்கிறது

என்றால் பாரமார்த்திகம்தான் அதன் ஜீவநாடி. சுயநலத்தினாலும், தன்னை அறியாமையினாலும் அது பாதிக்கப்பட்டிருக்கின்றது. முன்னோர்கள் விட்டுச் சென்ற பாரமார்த்திகப் பெருண்மைகளை இந்தியர் மீண்டும் அனுபூதியால் அறியவேண்டும். உலகிற்கு இந்தியாதான் ஆன்ம ஞானத்தை எடுத்து வழங்கவேண்டும். லோகாயதம் என்னும் நஞ்சானது உலகை விழுங்கி விடாது காப்பாற்றுவது இந்தியாவினுடைய கடமையாகும். உலகெங்கும் பாரமார்த்திகப் பெருண்மைகளைப் பரப்பும் பொறுப்பு இந்தியாவினுடையதேயாகும்.'

இந்தியர்களிடத்துக் காணப்பட்ட உயர் தன்மைகளைக் குறித்துப் பாராட்டினார். ஆனால் அவர்களிடத்துள்ள குறைகளைச் சுட்டிக்காட்ட அவர் ஒரு போதும் தவறியதில்லை. நாட்டு மக்களுள் பெரும்பாலோர் தமோகுணத்தில் மூழ்கிக் கிடக்கின்றனர். மக்கள் தங்களிடத்துள்ள தமோகுணத்தையும் சோம்பலையும் சத்துவகுணமென்று தவறாகக் கருதுகிறார்கள். காரிருளில் மனிதனுக்குக் கண் தெரியாது. மிகுந்த ஒளியிலும் மனிதனுக்குக் கண் தெரியாது. இருளும் ஒளியும் ஒன்றுக்கொன்று நேர்மாறானவை எனினும், அவையிரண்டும் உச்சநிலையை எட்டும்போது மனிதனது கண்களுக்கு இருளாகவே இருக்கின்றன. தமோகுணமும் சத்துவகுணமும் புறத்தோற்றத்தில் ஒன்றுபோலத்தான் தென்படும். ஆனால் அவையிரண்டும் நேர்மாறானவையாகும். செயலற்றுக்கிடப்பதைச் சத்துவகுணம் என்று எண்ணிவிடலாகாது. ரஜோகுணத்தை வெல்லுவதற்குச் செயலாற்றுவதன் மூலமாகத்தான் சத்துவகுணத்தை அடைய முடியும். மக்கள் அனைவரும் முதலில் தன்னம்பிக்கை உடையவர்களாகத் திகழவேண்டும். இழந்து விட்ட சுய நம்பிக்கையைத் திரும்பப் பெற வேண்டும். நாட்டிலுள்ள ஏழ்மைக்கும் அறியாமைக்கும் காரணம் மக்களிடத்துள்ள தாழ்வு மனப்பான்மைதான் என்றார்.

நாட்டு மக்களைத் தட்டியெழுப்ப முழுமனதோடும் ஒற்றுமையோடும் ஒத்துழைக்கக் கூடிய புதிய இயக்கமொன்றைக் காண விழைந்தார். அந்த எண்ணத்தின் விளைவு தான் ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கமாகும். துறவும் தொண்டும் அல்லது தியாகமும் சேவையும் தான் ராமகிருஷ்ண இயக்கத்தின் லக்ஷியமாகும். சரீரத் தேவைக்கு வேண்டிய உணவு, உடை, நோயுற்றோருக்கு மருந்து, எழுத்தறிவற்றவர்களுக்குக் கல்வி, வாழ்க்கையில்பாதிக்கப்பட்டவர்களுக்குப் போதிய வாழ்க்கைவசதிகள் ஆகியவற்றை அளித்தல் ஆகிய இவைதாம் அவர்முன் இருந்த மிகப்பெரிய பணியாகும். இவை வெறும் சமூகத்தொண்டல்ல; இவையே கடவுளுக்குச் செய்யும் தலைசிறந்த வழிபாடாகும். 'ஏழை எளியவர்கள், எழுத்தறிவற்றவர்கள், கீழ்நிலையடைந்தோர் இவர்கள் அனைவரையும் நீ வணங்கும் கடவுளாகப்பாவித்துச் சேவை செய்' என்றார் சுவாமி விவேகானந்தர். ராமகிருஷ்ண இயக்கம் இந்தத் தொண்டுகளைத்தான் இன்றும் செய்து வருகின்றது.

சுவாமி விவேகானந்தருக்குப் பின்னர் மகாத்மா காந்தியடிகள் இந்தத் தொண்டினை மேற்கொண்டார். தொண்டுக்கு முடிவென்பதே இல்லை. நாடும் மக்களும் இருக்கும் பரியந்தம் தொண்டு செய்யும் செயலும் இருந்துகொண்டே தானிருக்கும். நாட்டில் இன்றிருக்கும் அரசியல்முறை அமுலில் இருக்கும் பரியந்தம் மக்களிடையே ஏற்றத்தாழ்வுகளும், போட்டியும் பொறாமையும், ஏழ்மையும் அறியாமையும், ஜாதி மத வேறுபாடுகளும் இருக்கத்தான் செய்யும். ஆனால் ராமராஜ்யத்தில் இத்தகைய இழிவுகளுக்கு இடமில்லை. சுவாமி விவேகானந்தர் காணவிரும்பிய பாரதத்தை நாம் காணவேண்டுமாயின் நாட்டில் ராமராஜ்யத்தைக் கொண்டு வரவேண்டும். ராமராஜ்யத்தில் பணமும் சுயநலமும் பின்னணிக்குத் தள்ளப்படும். தர்மமும் சத்தியமும் முன்னணிக்கு வந்து ஆட்சிபுரியும். ராஜ்யத்தில் இருமைகளுக்கு இடமில்லை. 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்கின்ற பேரானந்தப் பெருநிலைதான் எங்கும் எல்லாரிடத்தும் குடிகொண்டிருக்கும். அத்தகைய ராம ராஜ்யம் அமையத் துறவையும் தொண்டையும் நமது வாழ்வின் லக்ஷியங்களாகக் கொள்ளவேண்டும். பாரதம் மேம்படுதற்குத் துறவும் தொண்டுமே உற்ற உபாயங்களாகும். இவையே பாரத மக்களுக்குச் சுவாமி விவேகானந்தர் தந்த உன்னதமான லக்ஷியங்களாகும்.

---

# சுந்தரர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

நீதியைக் கடைப்பிடித்து அறநெறி வாழ்வு வாழ்ந்தவர் சுந்தரர். இறைவன் வகுத்த வாழ்வு நெறியிலிருந்து பிறழாதவர் சுந்தரர். சமய நம்பிக்கை மக்களின் அடிப்படை உரிமை யாகப் போற்றி மதிக்கத்தகும் பெருமை யுடையதாகும். சமய நம்பிக்கையை இந்த நாடு முழுவதும் பரப்பி வளர்த்த பெருமை சுந்த ரர்க்கு உண்டு. சமய நம்பிக்கையின் அடிப் படையில் எழுந்த ஆத்மீகப் பெருமையால் தான் இந்த நாட்டிற்குச் சிறப்பு உண்டு.

பாரதநாட்டின் சிறப்பு அம்முறையிலே அமைந்தது. ஆத்மீகத் தத்துவத்திலும், இறை வழிபாட்டிலும் வடக்கு தெற்கு என்ற வேறுபாடு இல்லை. கன்னியாகுமரியிலிருந்து பத்ரிநாத், கேதாரநாத்வரை ஒன்று எனக் கருதினர்கள். இந்நாட்டின் ஒவ்வொரு பகுதி யையும் புனிதமாகவே கருதினர்கள். எனவே, பூமாதேவி, நிலமகள், மண் மாதா என்றெல் லாம் சிறப்புக்கருதிக் கூறினர்கள்.

தந்தையும் தாயும் நமக்கு உரியவர்களே. என்றாலும் தாயிடத்தில் ஒருவிதத் தனிப்பற்று தல் நம்மிடையே இருக்கக் காண்கிறோம். தாய் நாடு, தாய் மொழி என்று சொல்லு கிறோமே தவிர, தகப்பன் நாடு, தகப்பன் மொழி எனச் சொல்லுவதில்லை. வந்தே மாதரம் (தாயை வணங்குவோம்) என்கிறோம். நதிகளை யெல்லாம் பெண்பாலாகவே போற்று கிறோம். தோன்றின காலத்தில் இருந்து தாயின் தலைமையை ஏற்றுப் போற்றியவர்கள் தமிழர்கள். முழுமுதற் பொருளான இறை யைத் தாயாகப் போற்றியவர் தமிழர். இவ் வாறு தாய் வழியினராகத் தமிழர் வந்ததன் காரணமாக, உலக மக்கள் அனைவரையும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளாகக் கருதி னர்கள். குறுகிய கட்டுப்பாடுகள், ஆசாரங்கள் ஆகியவற்றில் தமிழர்கள் தங்களைக் கட்டுப் படுத்திக்கொள்ளவில்லை. எல்லா நாட்டு மக்களோடும் இனிது உறவாடினர். இவ் ஆழ்ந்த பண்பின் அடிப்படையில் அமைந்தது தான், ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற கருத்து.

பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாய் ஏற் பட்ட பரம்பரைப் பண்பாடு, அம்மரபில் தோன்றிய சுந்தரமூர்த்தி நாயனர்க்கு இயல் பாகவே அமைந்திருந்தது. தமிழ் நாட்டுத் தலங்களைப் போற்றுவதோடு சுந்தரர் நின்று விடவில்லை. ஆந்திர நாட்டில் உள்ள திருக் காளத்தித் தலத்தைப் (காளஹஸ்தி) பாடினர். இலங்கையில் உள்ள திருகோணமலையைப் பாடினர். மலையாள நாட்டிலுள்ள திருவஞ் சைக் களத்தை (இப்போது திருவஞ்சிக்குளம்) பாடினர். அதேபோன்று, வட இந்தியாவில் உள்ள கேதாரத்தையும் பாடினர்.

ஆதி சங்கரருக்கு அமைந்த சூழ்நிலையில் அவர் வடநாடு சென்று தரிசிக்கும்பேறு கிடைத் திருந்தது. எனவே இந்தியா முழுவதும் சென்றார். சுந்தரருக்கு அமைந்த சூழ்நிலையில், தமிழகத்தில் இருந்தவாறே, வட இந்தியாவில் உள்ள திருக்கேதார மலையை நினைத்துப் போற்றிப் புகழ்ந்து பாடுகிறார்.

''வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்<br>பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த<br>பறிதான்<br>தாழாது அறம் செய்மின் தடங்கண்ணன்<br>மலரோனும்<br>கீழ்மேலுற நின்றான் திருக்கேதாரம் எனீரே.''

உலக மக்களே! பசிநோயை உண்டாக்கு கின்ற இந்த உடம்பு எப்போதும் நிலைத்திருக் கும் என்பது பொய். இவ்வுடம்பு மண்ணாகி மறைந்தொழிவது மெய்யாகும். இந்தப் பிறவி என்கின்ற கடல் இல்லாமல் ஒழியவேண்டும்; அப்படிப் பிறவி ஒழியும் பொருட்டு, காலத்தை நீட்டித்துக்கொண்டே போகாமல் விரைவாக அறம் செய்தல் வேண்டும். அவ்வாறு அறத் தைச் செய்வதற்கு ஆதாரமாக, திருக்கேதார மலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் போற்றுங்கள் என்கிறார் சுந்தரர்.

வாழ்வு நிலை இல்லாதது; கடவுளை நினைத்து அறம் செய்யுங்கள் என்பதே இப்பாடலின் பொதுவான கருத்து. மனித வாழ்வுக்கு உறுதி தரக்கூடிய உறுதிப்பொருள்கள் நான்கு என ஆன்றோர்கள் கூறியுள்ளனர். அறம், பொருள்,

இன்பம், வீடு என்று தமிழில் கூறுவார்கள். தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்று வடமொழியில் கூறுவார்கள். இந்த உறுதிப் பொருளை இப்பாடல் உணர்த்துகிறது.

தமிழில், புறத்திணை இலக்கணத்தில், "காஞ்சி" என்ற ஒரு பிரிவு உண்டு. நிலையாமையைக் குறித்துக் காஞ்சி என்பது விளக்குகிறது. அதாவது, உலகமோ உலகத்தில் உள்ள பொருள்களோ நிலையில்லாதவை; அழியக் கூடியவை. செல்வத்தைச் சேர்த்து வைத்தால் நல்ல வழியில் செலவிடல் வேண்டும்; இருக்கிற வரையிலும் ஒழுங்காக இருந்து விட்டுப் போகவேண்டும் என்கிற முறையிலே காஞ்சித்திணை விளக்கும். அவ்வகையிலே, சுந்தரரின் இப்பாடல் அமைந்துள்ளது.

சுந்தரர் மனத்திலே இயல்பாக அமைந்திருந்த நற்பண்பு அவரைத் திருக்கேதார நாதரை எண்ணிப் பாடுமாறு தூண்டியது. அப்படி இயல்பாக அமைந்திருந்த நற்பண்பு யாது? அவருடைய முன்னோரிடத்து அமைந்திருந்த பண்பே அது. அப்பண்பு யாது? வேறுபாடில்லாத இறை உணர்வு, இறைவன் எங்கும் நிறைந்தவன். எங்கும் நிறைந்த பரம்பொருளை வேறுபாடு எதுவும் இல்லாத நிலையில் போற்றுதல் சுந்தரரின் பண்பு. அவர் தமிழ் அறிந்தவர். உலகம் முழுவதும் ஒற்றுமைக் கண்கொண்டு நோக்கும் தமிழ்ப்பண்பு அவரிடத்தில் மிகுந்திருந்தது.

சுந்தரரின் முன்னோர் அமைத்த கோவில்கள் தமிழ்நாடு முழுவதும் நிறைந்து விளங்கியமை போன்று, இந்தியா முழுவதும் நிறைந்து விளங்கின. தமிழ்நாட்டு மக்களின் பண்பாடு, கலாச்சாரம் ஆகியவை இந்தியா முழுவதும் பரவிப் பெருகி இருந்தன. இராமாயணம், மகாபாரதம், சைவ உப ஆகமம் ஆகிய சிவ தருமோத்திரம், மொகஞ்சதாரோ – ஹரப்பா அகழ்வு ஆய்வுக் குறிப்புகள் இவற்றால் தமிழ் மக்களின் நாகரிகம் பரவியிருந்த பெருமையை அறியலாம்.

சிக்கிம், திபெத், நேபாளம், மேகாலயா, கேதாரநாத், காஷ்மீரம் ஆகிய பகுதிகளில் உள்ள இடப் பெயர்கள், மலைவாழ் மக்களின் மொழிகள், பழங்கதைகள், நிலப் படங்கள் முதலியவை இமயமலைப் பகுதிகளில் தமிழர் கலாச்சாரம் பரவி இருந்ததைக் காட்டுகின்றன. அறிஞர் கூறிய சில சான்றுகளைக் காண்போம். சிக்கிம்–திபெத் எல்லையில் சோழன் மலைத்தொடரும், சோழன் கணவாயும் (Sola Range, Sola Pass) உள்ளன என்று ஆராய்ச்சி அறிஞர் மு. இராகவ ஐயங்கார் கூறுகிறார். (Reader's Digest World Atlas) — உலகப் படத்தில் சோழன் கணவாய் போடப்பட்டிருப்பதைக் காணலாம். நேபாளத்தில், சோல கும்பு (Chola Kumbu) என்ற மாவட்டமும், சோல கோலா (Chola Kola) என்ற ஓர் அருவியும் உள்ளன. மேகாலயா நிலப்படத்தில் (Latest Map of Megalaya) காரோ குன்று மாவட்டத்தின் தலைநகர் "சேரன் கிரி" என்று போடப்பட்டுள்ளது.

உத்தரப்பிரதேசம், கார்வால் மாவட்டத்தில் உள்ளது கேதாரநாதசுவாமி கோவில். அத்திருக்கோவிலையே சுந்தரர் பாடுகிறார். இந்தியா முழுவதும், உலகம் முழுவதும் தங்கள் பண்பாட்டைப் பரப்பிய தமிழ் முன்னோர்களின் பரம்பரையிலே தோன்றியவர் சுந்தரர். ஆதலின் அப்பண்பின் காரணமாகத் திருக்கேதார நாத சுவாமியைப் பாடினார்.

இவ்வாறு நல் உபதேசத்தின் மூலமாக அறத்தை வலியுறுத்துகிறார். தனி மனிதப் பண்பை உயர்த்துவதன் மூலம், சமுதாயத்தின் பண்பும் உயரும் அன்றோ! தனி மனிதனின் நடத்தையை நெறிப்படுத்துகிறது அறம். "நன்மையைச் செய்" என்று உடன்பாடாகக் கூறுகிறது அறம். "தீமையைச் செய்யாதே" என எதிர்மறையாகக் கூறுகிறது சட்டம். காரணங்காட்டி, அறத்தை வலியுறுத்துகிறார் சுந்தரர். சட்டம் என்ற ஒன்றால் கட்டாயப் படுத்தவில்லை.

மக்களின் சிந்தனையை உயர்த்தி, செயல்களைத் திருத்துகிறது அறம். இந்த அறநெறி புகட்டுவதன் மூலம் சமுதாயத்துக்கு நல்வழி காட்டியவராய்த் திகழ்கிறார் சுந்தரர்.

"முன்பு சிந்தித்த சிந்தனைகளைப் பின்பு நினைவுக்குக் கொண்டுவந்து, அமைதியான நிலையில் படைத்துக் கொடுப்பது கவிதை" என்கிறார் ஆங்கிலக் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த்.

சுந்தரர் பலகாலம் இந்தச் சமுதாயத்தைப் பற்றிச் சிந்தித்தார்; பிறகு, என்ன முறை

யிலே அறம் கூறுதல் வேண்டும் என்பதை நினைவுக்குக் கொண்டுவந்தார்; அப்படி நினைவுக்குக்கொண்டுவந்ததை அமைதியான நிலையிலே கவிதையாகப் படைத்துத் தருகிறார்.

திருக்கேதீச்சரம் என்பது இலங்கையில் உள்ள சிவத் தலங்களுள் ஒன்று. ஒரு காலத்தில் இலங்கை தமிழ்நாட்டுடன் இணைந்திருந்தது. மெகஸ்தனிஸ் என்ற கிரேக்க அறிஞர் இலங்கையைத் தாப்பிரபனே (Taprabane) என்கிறார்; அத்துடன் இந்தியாவிலிருந்து ஓர் ஆற்றினால் பிரிக்கப்பட்டுள்ளது எனவும் கூறுகிறார். சிவன் ஒளிபாத் மலை, திரிகோண மலை ஆகிய சிவத் தலங்களும் இலங்கையில் உள்ளன.

சுந்தரர் காலத்தில் இலங்கை, கடலால் பிரிக்கப்பட்டு விட்டது. இராமேச்சுரம் சென்று வழிபட்ட சுந்தரருக்கு இலங்கை சென்று திருகேதீச்வரரை வழிபட இயலவில்லை போலும். இராமேச்சுரம் கடற்கரையில் இருந்தே இலங்கையில் உள்ள திருக்கேதீச்சரத்தை எண்ணிப் பாடுகின்றார்.

"மூவர்என இருவர்என முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழில் மாதோட்ட நன்னகரில்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின்கரைமேல்
தேவன்எனை ஆள்வான் திருக்கேதீச் சரத்தானே."

மூன்று கண்களை உடைய சிவபெருமான், பாலாவி ஆற்றின் கரையில் உள்ள மாந்தோட்டம் என்னும் நகரில், திருக்கேதீச்சரம் என்னும் கோவிலில் எழுந்தருளியுள்ளான். மூவராகியும் இருவராகியும் முதற் கடவுளாகியும் நின்று என்னை ஆட்கொள்பவனாகத் திகழ்கிறான் என்கிறார் சுந்தரர்.

கடவுள் ஒருவரே; செய்யும் செயல்களின் மூலம் வெவ்வேறு பெயரைப் பெறுகின்றார். படைத்தல் தொழிலைப்புரிகின்றபோது அவர் பிரம்மா. காத்தல் தொழிலை ஆற்றும்போது திருமால். அழித்தல் தொழிலை இயற்றும் போது சிவன். ஒருவராகிய சிவபெருமானே எனக்கு இருவராகவும், மூவராகவும் காட்சியளிப்பதாகச் சுந்தரர் கூறுகின்றார். ஒரே வடிவத்தில் மூன்று வடிவம் தோன்றினாலும், எனக்குச் சிவபிரான் வடிவமே தோன்றுகிறது எனவும் சிவபிரானே மூவராகக் காட்சிதருகின்றார் எனவும் சுந்தரர் இயம்புவதாகக் கொள்ளலாம்.

இங்கே இன்னொரு அடியார் கூறுவதையும் நினைவிலே கருதலாம்.

"பார் உருவில் நீர் எரிகால் விசும்பும் ஆகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்துநின்ற
ஏர் உருவின் மூவருமே என்ன நின்ற
இமையவர்தம் திருஉருவேறு எண்ணும்போது
ஓர் உருவம் பொன்உருவம்; ஒன்று செந்தீ
ஒன்று மா கடல்உருவம் ஒத்து நின்ற
மூ உருவும் கண்டபோது ஒன்றும் சோதி
முகில் உருவம் எம் அடிகள் உருவந்தானே."

இறைவன் பஞ்ச பூதங்களாகத் திகழ்கிறான். இறைவன் முக்கடவுளாகத் திகழ்கிறான். மூன்று உருவங்களையும் நான் நினைத்துப் பார்க்கிறேன்; ஒன்று பொன் உருவம்; அது பிரம்மனின் வடிவம்; ஒன்று செந்தீ வடிவம்; அது சிவனின் வடிவம். ஒன்று கடல் வடிவம்; அது திருமாலின் வடிவம். இம்மூன்று வடிவங்களையும் ஒருசேர நான் காண்கின்றபோது, எனக்குத் தெரிவது, திருமால் வடிவந்தான் என்கிறார் திருமங்கையாழ்வார்.

இவ்விரு அடியவர்களின் கருத்தையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளலாம்.

"நூல்அறிவு பேசி நுழைவுஇலாதார் திரிக
நீல மணிமிடற்றான் நீர்மையே—மேல் உவந்து
எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத்து அவ்வுருவே ஆம்."

கடவுள், தன்னை, உள்ளன்போடு வணங்கிப் போற்றுபவர்கள் யாராக இருந்தாலும் சரி; அவர்கள் நினைத்த வடிவத்திலே விரைந்து சென்று அவர்களுக்கு அருள்புரிவான். இறைவனை அன்பினாலேதான் உணர முடியும். அல்லாமல், அறிவினாலே ஆராய்ந்து அறிந்துஉணர முயலுவோம் என்பது இயலாது. நூலினால் அறிந்துகொள்ளும் அறிவுக்கு அப்பாற்பட்டவன் இறைவன் என்கிறார் காரைக்கால் அம்மையார்.

மூவுருவமும் ஓர் உருவாய் நின்ற மூர்த்தி என்கிறார் சுந்தரர். இங்கே காரைக்கால் அம்மையார், நினைத்த வடிவிலே இறைவன் அடியவர்களின் மனத்திலே எழுந்தருளுவான் என்கிறார்.

# ஈசுவரவழிபாடு

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1976ஆம் ஆண்டு விருதுநகர் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய
[ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே.'

இது அப்பருடைய பாடல். மானுட ஜன்மத்தின் உயர்ந்த குறிக்கோள் இப்பாடலில் வெளியாகின்றது. முக்கரணங்களையும் கடவுள் வழிபாட்டுக்கென்றே பயன்படுத்தும்பொழுது நாம் தெய்வீகமாகின்றோம். அன்பை வளர்த்து வரவர நாம் தெய்வ சொருபமாக மாறுகின்றோம். கைம்மாறு கருதாது தெய்வத்துக்கும், அவருடைய குழந்தைகளுக்கும் உழைக்கின்றவளவு நாம் தெய்வீகமாக மாறுகின்றோம். பிரபஞ்ச முழுதும் கணக்கற்ற உயிர்வகைகள் இருக்கின்றன. இத்தனைவித உயிர்களாகவும் ஈசன் விளையாடிக்கொண்டிருக்கின்றார். சிற்றுயிர் பேருயிராகப் பரிணமித்து வருவது இயற்கையின் திட்டம். பள்ளிக்குச்செல்லும் சிறுவர், சிறுமியர் பாடம் கற்றுப் படிப்படியாகக் கல்வியில் மேல் நிலைக்கு வருகின்றனர். இப்பிரபஞ்சம் இறைவனது பெரிய பள்ளிக்கூடம். இதிலிருக்கின்ற ஒவ்வொரு உயிரும் தனக்குத் தனி வியக்தி இருப்பதாக எண்ணிக்கொண்டிருக்கிறது. ஒவ்வொரு உயிரும் மேல் நிலைக்கு வர முயற்சி செய்கிறது. படிப்படியாக எல்லா உயிர்களும் மேல்நிலைக்கு வருகின்றன. உயிர்கள் எடுக்கும் பல்வேறு பிறவிகளைப்பற்றி மாணிக்கவாசகர் பகர்வதாவது:

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்
[பெருமான்."

வாழ்க்கையைச் சிற்றுயிராகத் துவக்கிப் பலகோடி பிறவிகளில் முயற்சி செய்து பேருயிராகப் பரிணமித்து மானுட நிலையை அடைகின்றோம். மானுடராகவும் பல பிறவிகள் எடுக்கின்றோம். அப்பிறவிகளிலெல்லாம் வாழ்க்கையை ஆராய்ந்து பார்த்துப் பிரபஞ்ச வாழ்வு நிலையற்றது என்று அறிகின்றோம். பிரபஞ்ச வாழ்க்கையைச் சரியாகப் பயன்படுத்தினால் நிறை நிலையிலிருக்கின்ற ஈசுவரனை அடையலாம் என்ற நல்லறிவும் நமக்கு வருகின்றது. மானுடப் பிறவியை ஈசுவர வழிபாட்டில் பயன்படுத்துவதுதான் மானுட வாழ்வின் குறிக்கோளாகும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்வதாவது: "நாம் மானுடராகப் பிறந்திருப்பது கடவுள் வழிபாட்டுக்கேயாம்." இச்சிறந்த கோட்பாட்டை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். உயிர்வகைகள் யாவும் தங்கள் போக்கில் முயன்று வருகின்றன. கடவுள் வழிபாடு என்பது நல்லறிவு படைத்த மக்களுக்கே உரித்தாகின்றது. பல பிறவிகளில் முறையாக ஆராய்ச்சி செய்ததின் விளைவாக நல்லறிவு வருகிறது. "அநித்தியம், அசுகம், லோகம், இமம், ப்ராப்ய பஜஸ்வமாம்" என்பது கிருஷ்ண பரமாத்மாவின் வாக்கு. இப்பிரபஞ்சம் நித்தியமானதன்று. எப்பொழுது வேண்டுமானாலும் இப்பிரபஞ்சத்தை விட்டு நாம் பிரிந்து போகவேண்டிவரும். "இன்றைக்கு இருந்தாரை நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ திடமில்லை" என்ற நிலை தான் உண்மை. இத்தகைய அநித்திய பிரபஞ்ச வாழ்வு இன்பம்தருவதுபோன்று காட்சி தருகிறது. ஆனால் இவ்வுலகில் பெறுகின்ற இன்பம் துன்பமாக மாறுகின்றது. அறிஞர்களுக்குத்தான் அவ்வுண்மை விளங்குகின்றது. குழந்தை பிறப்பது இன்பமாகத் தென்படுகிறது. அவ்வின்பத்தை வெளிக்காட்ட கற்கண்டு வழங்குகிறார்கள். பிறப்பைத்தொடர்ந்து பல துன்பங்கள் வருகின்றன. கடைசியாக மரணம் எல்லார்க்கும் வருகிறது. எனவே வாழ்க்கை அழுகையாக முடிகிறது. வாழ்வு சிரிப்பில் துவங்கி அழுகையில் முடிகிறது. இதிலிருந்து யாரும் தப்பித்துக்கொள்ள முடியாது. உலகில் சிறு இன்பத்தைப் பெறுவதற்குப் படாதபாடு படுகின்றோம். பிறகு அது துன்பமாக வடிவெடுக்கிறது. நிரந்தரமான இன்பம் இம்மண்ணுலகில் இல்லை. மண்ணுல

கில் இருக்கும்பொழுதே துன்பத்தைக் குறைக் கவும், இன்பத்தை வளர்க்கவும் நமக்குச் சாத் தியம். '' இன்பமே எந்நாளும் துன்பமில்லை'' என்பது அப்பர் வாக்கு. பெரியோர்கள் யாவரும் அங்ஙனமே பகர்ந்திருக்கின்றுர்கள். இப்பிரபஞ்ச வாழ்க்கையில் அகப்பட்டுக் கொள்ளாதவர்களுக்கு 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்பது முற்றிலும் உண்மை. பிரபஞ்ச வாழ்வில் அகப்பட்டுக் கொள்கிறவர் களுக்கு இன்பத்தைவிட துன்பம்தான் அதி கம். கடவுள் வழிபாடு அதிகரிக்கும்பொழுது துன்பம் குறைந்து இன்பம் அதிகரிக்கின்றது. கடவுள் வழிபாடு செய்கின்றவர்களுக்கு இவ் வுண்மை அனுபவத்தில் விளங்கும். வாழ்க் கையை இடையருது கடவுள் வழிபாடாக மாற்றி அமைத்துக்கொண்டவர்கள் பாக்கிய வான்களாகிருர்கள்.

சுகபோகத்திற்காகச் சரீரம் அமைந்திருக்கிற தென்று அறிவிலிகள் கருதுகின்றனர். இவ் வுலக இன்பத்திற்காக உடலைப் பயன்படுத்து கின்றவர்கள் மக்கள் வடிவத்திலிருந்தாலும் அவர்கள் மாக்கள் ஆவார்கள். மனிதன் தன் வாழ்வை மகோன்னத வாழ்வாகவும் மாற்ற லாம்; நரக வேதனைப்படும் நிலைக்கு தன் வாழ்வை மாற்றலாம். மானுட வாழ்வுக்கு அத்தகைய வாய்ப்பு உண்டு. மானுடன் தன் வாழ்வை விலங்கு நிலையில் வைத்திருப்பதோ, நல்லியல்பு படைத்த மனித நிலையில் வைத் திருப்பதோ, தெய்வ நிலையில் வைத்திருப் பதோ சாத்தியம். மற்ற உயிர் வகைகளுக்கு அந்த வாய்ப்பு இல்லை. நூறு பசுக்களை ஆராய்ந்து பார்த்தால் பசுக்களின் இயல்பு தான் அவைகளிடத்து இருக்கும். நூறு புலி களை ஆராய்ந்து பார்த்தால் புலிகளின் இயல்பு தான் அவைகளிடத்திருக்கும். அதே போன்று பாம்பு, புறு ஆகிய எந்த உயிர்களை ஆராய்ந்து பார்த்தாலும் அவைகளுக்குரிய இயல்பே அமைந்திருக்கும். நூறு மனிதர்களை ஆராய்ந்து பார்த்தால் அவர்கள் யாவரும் மனித இயல்பு படைத்தவர்களாக இருக் கிருர்கள் என்று சொல்லமுடியாது. மக்களுக் கிடையில் பசு இயல்பு படைத்தவர்கள் இருக் கிருர்கள். மக்களுக்கிடையில் புலி இயல்பு படைத்தவர்களிருக்கிருர்கள், மக்களுக்கிடை யில் பாம்பு போன்றவர்களிருக்கிருர்கள். மக் களுக்கிடையில் மானுட இயல்பு படைத்தவர் கள் இருக்கிருர்கள். மக்களுக்கிடையில் தெய் வீக இயல்பு படைத்தவர்களும் உண்டு. இனி நம்மை எந்தக் கூட்டத்தில் வேண்டுமானுலும் வைத்துக்கொள்ளலாம். அதற்கு நமக்குச் சுதந்தரமுண்டு. பஞ்சேந்திரியங்கள்வாயிலாகச் சிற்றுயிர்கள் சுகத்தை அனுபவித்து வருகின் றன. நாம் மானுட சரீரம் எடுத்திருப்பது பஞ்சேந்திரியங்கள் வாயிலாகச் சிற்றின்பத் தைப் பெறுவதற்காக அன்று. நம்முடைய சரீ ரத்தைத் தெய்வத்திற்குரிய ஆலயமாக மாற்று வதற்கு நமக்குச் சாத்தியம். ஒவ்வொரு உடலி லும் ஜீவாத்மா தான் அடைந்த பரிபாகத்திற் கேற்றவாறு வாழ்ந்துவருகிறது. மானுட நிலை யிலிருக்கும் ஜீவாத்மன் மானுட நிலையிலிருந்து கீழ்நிலைக்கும் போகலாம், மானுட நிலையை விட்டு மேல்நிலைக்கும் போகலாம், மானுட நிலையைவிட்டு மேலே போகும்போதுதான் மானுட ஜன்மத்தை நாம் நன்கு பயன்படுத்திய வர்களாகின்றோம்,நம்மை நாம் உயர்ந்த நிலைக்கு எடுத்துச் செல்வதற்குக் கடமைப்பட்டிருக் கிறோம். நாணல் ஒன்றைக் காலில் போட்டு மிதித்தால் அது செத்தையாகப் போகிறது. நாணலைக்கொண்டு கண்ணன் இனிய இசையை உண்டுபண்ணி உயிர்கள் அனைத்தையும் தம் மிடம் ஈர்த்தான். அவருடைய இசைக்கு வசப்பட்டு உயிர்களனைத்தும் அவரிடம் லயமாயின. நாணலுக்கு நிகர் மானுட உடல் ஆகிறது. மானுட உடலை அற்பகாரியத் துக்குப் பயன்படுத்திப் பாழ்படுத்தி விடலாம். மானுட உடலை உயர்ந்த காரியத்துக்கும் பயன் படுத்தலாம். தெய்வம் உறைகின்ற கோயி லாக மானுட உடலைக்கருதி அதைப் பயன் படுத்தி வருகின்றபொழுது மானுட ஜன் மத்தை நன்கு பயன்படுத்தியவர் ஆகின்றோம். மானுட சரீரத்துக்குப் புறச் சின்னங்களாக ஆலயங்கள் அமைந்திருக்கின்றன. வீடுகட்டு வதற்கு முன்பு வீட்டை எப்படி அமைக்கவேண் டும் என்பதற்கு முதலில் காகிதத்தில் கட்டட அமைப்புப் படம் (Plan) ஒன்றைப் போட்டுக் கொள்கிறோம். அவ் அமைப்புப் படமே வீடு ஆகிவிடாது. வீட்டு அமைப்புக்கு அது புறச் சின்னம் ஆகிறது. தேசப் படத்தில் பல ஊர்

களைப் பார்ப்பதில் அவ் ஊர்களைப் பார்த்தவர்களாகமாட்டோம். அவ் ஊர்களை நேரே போய்ப் பார்த்தால்தான் அவற்றைப் பற்றிய அனுபவம் ஏற்படும். கற்றதைக் காயத்தால் செயல்படுத்த வேண்டும். ஆலயத்துக்குச் செல்கின்றவர்கள் தெய்வச் சிந்தனையுடன் செல்லவேண்டும். ஆலய வழிபாடு முடியும்வரையில் தெய்வச் சிந்தனையுடன் இருக்கவேண்டும். உடலையும் உள்ளத்தையும் தூய்மையாக வைத்திருந்து ஆலயத்தில் அருளைவளர்ப்பது ஆலய வழிபாடாகும்.

சலனப்பட்டுக் கொண்டிருப்பது மனதினுடைய இயல்பு. அப்படிச் சலனப்பட்டுக் கொண்டிருக்கும் மனதைக் கட்டியாள்வது தான் செயற்கரிய செயலாகும். "பாழான என் மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவதுனக்கருமையோ!" எனத் தாயுமானவர் பிரார்த்திக்கின்றார். மனதைப் பெரிய நிலையில் வைத்தால் நாம் பெருமையடைகின்றோம். மனதை அல்ப நிலையில் வைத்தால் நாம் சிறுமையடைகின்றோம். பிரபஞ்ச வாழ்க்கையில் உழலும் மனம் கெட்டுப் போகிறது. பிரபஞ்ச வாழ்வில் சென்றுகொண்டிருக்கும் மனதை அதில் போகாது தடுத்து இறைவனுக்குரியதாகச் செய்யுமிடத்து அது பெருநிலை அடைகிறது. தெய்வீகச் சிந்தனையில் மனம் மூழ்கியிருக்கின்ற அளவு நாம் தெய்விக சொரூபம் ஆகின்றோம். "வெள்ளத்தனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத்தனைய துயர்வு" என்பது கோட்பாடு. தடாகத்தில் நீர் உயர்கின்ற அளவு அத்தடாகத்தில் உள்ள தாமரை, ஆம்பல் முதலிய கொடிகளும் உயர்கின்றன. அங்ஙனம் மனிதன் மேலாம் எண்ணங்களை எண்ணுகின்ற அளவு மேலாம் நிலையை அடைகின்றான். இக்கோட்பாட்டைச் சிவனார் தம் சொரூபத்தில் வைத்திருக்கின்றார். சிவனார் இடக்கரத்தில் மான் ஒன்றை வைத்திருக்கின்றார். சதா ஓடி அலையும் தன்மையுடையது மான். அலையும் தன்மையில் மனது மானுக்கு நிகர் ஆகின்றது. நாம் ஓரிடத்தில் அமர்ந்திருக்க நம் மனது எங்கெங்கோ சென்று அலைகிறது. அப்படி அலைந்து திரியும் மனதை அடக்கிப் பழகவேண்டும். சிவனார் கையில் உள்ள மான் அவருடைய முகத்தைப் பார்த்த வண்ணம் இருக்கின்றது. அங்ஙனம் மனதை அடக்கி அதைக் கடவுள் சிந்தனையில் செலுத்துகின்ற அளவு அதனிடத்திலுள்ள துஷ்டத்தனம் போய் அதற்குத் தெய்வீகத் தன்மை வருகிறது. சிற்றின்பம் படைத்த மனதைப் பேரியல்பு படைத்ததாய் மாற்றியமைக்கலாம். தெய்வச் சிந்தனை ஒன்றேஅதற்கு உற்ற உபாயம் ஆகிறது. மனம் தெய்வச் சிந்தனையில் ஊறியிருப்பதற்கு ஏற்ப அது தெய்வச் சம்பத்தைப் பெறுகிறது.

மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களை நாம் நன்கு பயன்படுத்தவேண்டும். உண்மை, வாய்மை, மெய்மை ஆகிய மூன்றும் சேர்ந்து சத்தியம் ஆகின்றது. உள்ளத்தில் கள்ளம் இல்லாது இருப்பது உண்மை. உள்ளத்தில் இருப்பதை உள்ளபடி உரைப்பது வாய்மை. சொல்லுவதற்கு ஏற்பக் காயத்தால் செயல்புரிவது மெய்மை. இங்ஙனம் மூன்று கரணங்களும் ஒத்திருக்கும்போதுதான் நாம் சத்திய விரதத்தில் நிலைபெற்றவர்கள் ஆகின்றோம். விரதங்களுள் சத்திய விரதம் மிகக் கடினமானது. எண்ணுகின்ற எண்ணத்துக்கும், சொல்லுகின்ற சொல்லுக்கும் நம்மை அறியாது முரண்பாட்டை உண்டுபண்ணிவிடுகின்றோம். செயல் புரிவது சிந்தனைக்கும், சொல்லுக்கும் மாறுகப் போய்விடுகின்றது. இப்படி நடந்துகொள்கின்ற மனிதனது சொரூபம் சிதறடைந்து கெட்டுப்போகின்றது. மூன்று கரணங்களும் ஒத்து இருக்கும்போது யோகம் பூர்த்தி ஆகின்றது. முக்கரணங்களுக்கிடையில் முரண்பாடு இல்லாது ஒற்றுமை உண்டாகும் பொழுதுதான் வாய்மையில் நிலைபெற்றவர்கள் ஆகின்றோம். துஷ்டத்தனம் படைத்தவனுக இருந்தாலும் வாய்மை உடையவனுக இருப்பானுகில் அவன் மேல் நிலைக்கு வந்துவிடுவான். ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு அமைந்த சிஷ்யர்களுள் கிரீஷ்சந்திர கோஸ் என்பவர் ஒருவராவார். அவர் பஞ்சமா பாதகங்களும் செய்தவர். ஆனல் எதையும் ஒளித்து வைக்காது உள்ளபடி சொல்லுகின்ற வாய்மை அவரிடத்து இருந்தது. அவரிடத்து இருந்த வாய்மை என்னும் நலனை ஸ்ரீ ராமகிருஷ்ணர் நன்கு பயன்படுத்தினர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் கிரீஷ்சந்திரகோஸிடம் பகர்ந்ததாவது: "நீ என்ன வேண்டுமென்று

லும் செய்துகொள். உனக்கு ஞாபகம் வரும் பொழுது அவைகளையெல்லாம் எனக்கு அர்ப்பணம் செய்.'' ''ஞாபகம் வந்தால்தான் உங்களுக்கு நான் என் செயலை அர்ப்பணம் செய்வேன். ஞாபகம் வராவிட்டால் அர்ப்பணம் செய்யாத குற்றம் என்னைச் சாராது'' என்று கிரீஷர் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு ஒப்புதல் கொடுத்தார். ''ஞாபகம் வரும் பொழுது உன் செயலை எனக்கு அர்ப்பணம் செய்'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறியது அவருடைய ஞாபகத்துக்கு வந்துகொண்டே இருந்தது. அவர் கெடுதல் செய்யும் பொழுது அதை ராமகிருஷ்ணருக்கு அர்ப்பணம் பண்ணியாகவேண்டும் என்ற எண்ணம் வரும். இதையா! அம்மகானுக்கு அர்ப்பணம் பண்ணுவது! என்று எண்ணி அதைச் செய்யாது விட்டு விடுவார். கிரீஷ் சொன்ன சொல் மாருதவர். ஆகையால் ஒவ்வொரு கேட்டையும் கைவிட்டு விட்டார். மகாபாபியாக இருந்தவர் பெரிய நிலைக்கு வந்துவிட்டார். சத்தியத்தைக் கடைப் பிடித்து மேல்நிலைக்கு வரக் கிரீஷருக்குச் சாத்தியமாயிற்று. நாமும் ஊக்கத்தோடு அவர் போன்று சத்தியத்தைக் கடைப்பிடித்தால் மேல் நிலைக்கு வருவது நிச்சயம். சத்தியத்தைக் கடைப்பிடிப்பது சிறந்த ஈசுவர வழிபாடு ஆகிறது.

கடவுள் வேறு, சத்தியம் வேறு என்று நாம் எண்ணக்கூடாது. சத்தியமே கடவுள். சத்தியம், ஞானம், அனந்தம், பிரம்மம் என்பது பரவஸ்துவுக்கு ஒரு விளக்கம். வாய்மையை விட்டுப் பிசகாது இருக்கும் பொழுது மனம் தூய்மை அடைகிறது. மனம் முற்றிலும் தூய்மை அடையும் பொழுது தெய்வ சாக்ஷாத்காரம் பண்ணும் திறமை பெறுகின்றது. ''சித்த மலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன் எனக்கு அருளியவாறு யார்பெறுவார் அச்சோவே'' என்ற அருள்வாக்கின்படி சித்த மலம் அறுபடும் பொழுது சிவமாய் விடுகின்ருேம். நாம் பேசும் பேச்செல்லாம் சத்தியமாக இருக்குமானல் அது சிறந்த தவம் ஆகிறது. நல்ல இயல்பு படைத்தவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்தால், ''நீ மீண்டும் வருகிருயா?'' என்று கேட்பார். கெட்ட இயல்பு படைத்தவர்கள் அவரிடம் வந்தால் அத்தகைய கேள்வி கேட்கமாட்டார். ஓர் அன்பரிடம் ''மீண்டும் வருகிருயா?'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கேட்டார். அவ் அன்பர் 'வருகிறேன்' என்று ஒத்துக்கொண்டார். ''எப்பொழுது வருகிருய்?'' என்று கேட்டார். ''நிச்சயமாக அடுத்த புதன்கிழமை வருகிறேன்'' என்று சொன்னர். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் ''நிச்சயம் என்று சொல்லாதே. எதிர்பாராது தடை ஏற்பட்டுவிட்டால் நீ சொன்னசொல் பொய்யாய்ப் போய்விடும். சொன்ன சொல் பொய் போய்விடக்கூடாது. ஆகையால் இடையூறு எதுவும் இல்லாது திருவருள் கூட்டிவைத்தால் வருகிறேன் என்று சொல்'' என்ருர். தந்தையின் சொல் பொய்போய்விடக் கூடாது என்பதற்காக இராமன் பதினன்கு ஆண்டுகள் வனவாசம் செய்தான். பாண்டவர்கள் வனவாசம் செய்யும்பொழுது யுதிஷ்டிரனின் தம்பிமார்கள் பகர்ந்ததாவது: ''சூதாடித் துரியோதனன் ராஜ்யத்தை அபகரித்திருக்கிருன். அது க்ஷத்திரிய தர்மம் அன்று. நாம் படையெடுத்துச் சென்று ராஜ்யத்தை மீட்டுக்கொள்வது க்ஷத்திரிய தர்மம் ஆகும்.'' யுதிஷ்டிரன் பகர்ந்ததாவது: ''பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசத்திற்கும், ஒருவருட அஞ்ஞாதவாசத்துக்கும் ஒத்துக்கொண்டு வந்துள்ளோம். அந்தச் சொல்லைவிட்டு நாம் பிசகக்கூடாது. நாம் ஒப்புக்கொண்டுள்ளபடி பதின்மூன்று ஆண்டுகளையும் முடித்துவிட்டு அதன் பிறகு நாம் வேண்டியதைச் செய்யலாம்.'' மனிதனது சொல் பொய்போய்விட்டால் அவன் கீழ்நிலைக்குப் போய்விடுவான். சத்திய விரதத்தில் நிலைபெறுகின்ற அளவு நாம் பண்பாடு அடைந்து வருகின்ருேம். சத்தியத்தைக் கடைப்பிடிப்பது ஈசுவர வழிபாடு ஆகும்.

சத்தியத்தில் நிலைபெற்றிருப்பதன் விளைவாகக் கடிமனம் லிங்கமாக மாறுகிறது. நம் நாட்டில் சில ஸ்தலங்களில் ஜோதிர்லிங்கங்கள் இருக்கின்றன என்று சொல்லப்படுகிறது. உள்ளத்தில் ஜோதிர்லிங்கம் இருப்பதை நாம் அனுபூதியில் காணலாம். பாதரசம் சிதறடைந்து ஓடக்கூடியது. சித்தர்கள் மூலிகையின் சாறைப் பாதரசத்தில் சேர்த்துச் சக்தியாக்கி மணிபண்ணுகின்ருர்கள். அம்மணியை உடலில் அணிந்திருந்தால் உடலுக்கு நோய்

வராது. உடலை ஆரோக்கியமாக வைத்திருந்து தெய்வ காரியத்துக்குப் பயன்படுத்தலாம். மனம் சிதறடைந்து போகக்கூடியது. அம் மனதை அடக்கி மணியாகப் பண்ணலாம். மணி என்றால் பிரகாசம் வாய்ந்தது என்று பொருள். அந்தக்கரணம் சித்தியடைந்து பிரகாசம் அடைவது ஆகிறது. நாம் வாழ்கின்ற பெரு வாழ்வின் விளைவாக மனதுக்கு அப்பிரகாசம் வருகிறது. கன்னங்கரேலென்று இருக்கின்ற இரும்பைத் தீயில் போட்டால் சிவப்பாக மாறுகின்றது. அதை இன்னும் உஷ்ணப்படுத்தினால் வெள்ளையாக மாறுகிறது. பிறகு அது சுடர்விடுகிறது. பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு பொருளையும் பெரிய நிலைக்குக் கொண்டுபோகப்போகச் சுடர் விடுகின்ற தன்மை அதற்கு வருகின்றது. மனம் உலக விஷயங்களில் போகுமானால் அது அடுப்புக் கரிபோன்று கன்னங்கரேலென்று ஆகிறது. மனம் தெய்விக எண்ணத்தில் ஈடுபடும் பொழுது ஜோதிர்லிங்கமாக மாறுகிறது. மனம் அத்தகைய அரிய பொருள் ஆகும். மனதை உடைத்திருப்பவன் மனிதன் ஆகின்றான். மனம் சிற்றுயிர்களிடத்து வளர்ச்சிபெறாமல் இருக்கிறது. மனித நிலையில் அது நன்கு வடிவெடுத்து வந்திருக்கிறது. மனிதனிடத்திலுள்ள மனதை முறையாகப் பண்படுத்தித் தெய்வத்தின்பால் செலுத்தினால் அது தெய்வ சொரூபமாக மாறுகிறது. மனம் தெய்வ சொரூபமாக மாறினால்தான் ஈசுவர வழிபாடு நன்கு நிகழும்.

முக்கரணங்களையும் பெருநிலையில் வைத்தால் மானுட ஜன்மத்தை நாம் நன்கு பயன்படுத்தியவர்கள்ஆகின்றோம். ஸ்ரீராமகிருஷ்ணர் நெல் குத்துகிறவர்களைக்கொண்டு ஒரு பாடம் புகட்டுகின்றார். நெல்குத்துபவர்கள் இடை இடையே அதை எடுத்து இன்னும் எத்தனை விகிதாச்சாரம் நெல் இருக்கிறது என்று பார்ப்பார்கள். அவர்களைப்போன்று மனிதர்கள் இடை இடையே தங்களை ஆராய்ச்சி பண்ண வேண்டும். காயத்தைக் கோயிலாக வைத்திருக்கவேண்டும் என்பது கோட்பாடு. நாம் அப்படிக் காயத்தைக் கோயிலாக வைத்திருக்கிறோமா என்று ஆராய்ச்சி பண்ணிப் பார்க்க வேண்டும். பிரபஞ்ச வாழ்வில் ஈடுபடுத்திக் காயத்தைக் கெட்டுப்போகும்படி செய்திருக்கிறோமா அதை ஆலயமாக வைத்திருக்கிறோமா என்பதை ஆராய்ச்சி பண்ணிப் பார்த்தால் நமக்குத் தெரியும். அலையும் மனதை எவ்வளவு தூரம் அடக்கி ஆண்டு வருகிறோம் என்பதும் ஆராய்ச்சி பண்ணிப் பார்க்கவேண்டிய விஷயம். 'துள்ளும் அறியா மனது பலி கொடுத்தேன்' என்று தாயுமானவர் பகர்கின்றார். அலையும் மனதையும் அறியா மனதையும் ஈசனிடம் கொடுத்து அதைத் திருத்தி அமைக்க வேண்டும். ஈசுவர வழிபாட்டுக்கு நல்ல மனதுதான் தேவை. மனதை மாண்புடையது ஆக்குவது ஈசுவரவழிபாடு செய்வதற்கு நிகர் ஆகிறது. உலகத்துக்கு அடிமையாகும் மனது பாழ்பட்ட மனதாகிறது. தெய்வத்துக்கு அடிமையாகும் மனது பண்பட்ட மனதாகிறது. மனம் உலக சுகத்துக்கும், இந்திரிய சுகத்துக்கும் அடிமைப்பட்டுக் கிடக்குமானால் அம்மனது அசுரமனது ஆகிறது. அவ் அசுரமனதிலிருந்து நம்மை நாம் பிரித்தெடுத்துக்கொள்ள வேண்டும். அவ் அசுர மனதில் தோன்றும் எண்ணங்களுக்கு நாம் அடிமையாக இருக்கக்கூடாது. அசுர மனதில் தோன்றும் எண்ணங்களிலிருந்து நாம் விலகியிருக்கவேண்டும். தெய்வ வடிவங்களைச் சிந்தித்துப் பார்ப்பதிலும் ஜபத்திலும், தியானத்திலும், தெய்வீகக் காரியங்களிலும் மகிழ்ச்சி அடைகின்ற மனது தெய்வீக மனது ஆகிறது. அம்மனதில் தோன்றும் எண்ணங்களோடு நம்மை லயப்படுத்தலாம். அவ் எண்ணங்கள் தெய்வீக எண்ணங்களாக இருக்கும். உள்ளத்தில் தெய்வீக எண்ணங்களை வளர்ப்பதும், தெய்வீக மகிமைகளில் மகிழ்ச்சியுற்று இருப்பதும் நல்ல ஈசுவரவழிபாடு ஆகிறது. உலக சுகங்களுக்கு மனம் கல்லாகவும் தெய்வீக விஷயத்தில் மனம் மெழுகாகவும் இருக்க வேண்டும். தெய்வீக உணர்ச்சிக்கு மனதில் இடம்கொடுத்து மனதைப் பண்படுத்தி வருகின்றவர்கள் நல்ல சாதகர்கள் ஆகிறார்கள். தேன் ஈ தேனைமட்டும் அருந்துவது போன்று தெய்வீக எண்ணங்கள் மட்டும் மனதில் இடம் பெறுமானால் அம்மனம் தெய்வத்துக்கு உகந்த மனம் ஆகிறது. மலர்போன்று புதுமையும்,தூய்மையும் ஆகிக்கொண்டிருக்கும் மனது வழிபாட்டுக்கு உகந்த மனது ஆகிறது. (தொடரும்)

---

# வாசுதேவமனன விளக்கம்

(சுவாமி ஸதானந்தர்)

புண்ணியம், பாபம், இரண்டும் கலந்தது ஆகிய மூன்றுவிதக் கர்மாக்களும் மனம், வாக்கு, காயம் என்கிற திரிகரணங்களால் செய்யப்படுகின்றன.

கேள்வி: நான் சாப்பிடுகிறேன், நான் தூங்குகிறேன் என்று சொல்லும்போது இச் சரீரத்தைத் தாங்கியிருக்கிற ஆத்மா சாப்பிடுகிறது, ஆத்மா தூங்குகிறது என்றுதானே பொருள். அப்படி அல்லாமல் இக்கர்மங்களுக்கு திரிகரணங்கள்தான் காரணம் என்று எப்படிச் சொல்வது?

பதில்: ஆத்மாவானது விகாரம் அற்றது, மாறுதல் இல்லாதது என்று பொருள். கிரியை இல்லாதது, தன்னுள்ளே எந்தவிதப் பேதமும் அற்றது. அத்துவித வஸ்துவை, நித்த நிர்மல சகித நிஷ்பிரபஞ்சப் பொருளை, நிர்விஷய சுத்தமான நிர்விகாரத்தை நிரஞ்சன நிராமயத்தை எப்படிச்செயல்களுக்குக் கர்த்தா ஆக்க முடியும்? ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் (செய்பவன் என்கிற நிலைமை) எப்படி வரும்?

கேள்வி: கர்த்தா (செய்பவன்) என்கிற நிலைமை தன்னிடம், ஆத்மாவிடம் இருப்பதாகத் தெரிகிறது. ஆத்மாவைத் தவிர வேறு கர்த்தா இருப்பதாகத் தெரியவில்லையே?

பதில்: ஆத்மாவிடத்தில் தோன்றுகிற கர்த்ருத்வம் அதன்மேல் கற்பிக்கப்பட்டதே தவிர அதன் ஸ்வபாவம், இயற்கை அன்று; உண்மையில் அப்படி இல்லை. கர்த்ருத்வம் ஆத்மாவின் இயற்கையாக இருக்குமாகில் பின் நாம் ஏன் கர்த்ருத்வத்தை ஒழிக்க முயல வேண்டும்? கர்த்ருத்வம் ஒழிந்தாலன்றி சம்சாரபந்தம் நீங்காது என்று நம் சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. கர்த்ருத்துவம் இல்லாவிட்டால் வேதாந்த விசாரம் செய்து நம்முள் இருக்கிற கர்த்ருத்வ புத்தியை ஒழிக்க நாம் செய்கிற முயற்சிகள் எல்லாம் எதற்காக?

கேள்வி: கர்த்ருத்வம் ஆத்மாவின் இயற்கைக் குணமே. நாம் சாதனை செய்து அதை அழிக்கிறோம் என்று ஏன் வைத்துக் கொள்ளக்கூடாது?

பதில்: இயற்கை அல்லது சுபாவம் என்பது அப்பொருளின் சொரூப லக்ஷணம் ஆகும். சொரூபத்தை அழிக்க யார் முற்படுவார்கள்? சொரூபமே போய்விடுகிறது என்றால் பிறகு புருஷார்த்தத்தை அடைவது யார்? கர்மத்தைக் கடந்த, அகர்த்தா, ஜீவன் முக்தனே இல்லை என்றால் வேதாந்த சம்பிரதாயங்களும், தத்துவ உபதேசங்களும், குரு சிஷ்ய பரம்பரையும் இல்லாமல் போய்விடும். "ஆத்மா அவயவமற்றது, செய்கையற்றது, சாந்தம், குற்றமில்லாதது, களங்கமற்றது, சாக்ஷி, சேதனம், நிர்க்குணம், கேவலம் (கேவலமாகப் போய் விட்டான் என்று பொருளாதாரம், உடல் ஆரோக்கியம், ஒழுக்கம் ஆகியவைகளில் கீழே போனவனைப் பற்றி நாம் சொல்லுகிறோம். ஆனால் வேதாந்தத்தில் கேவலம் என்றால் தன்னில் தானாய், தான் தனியன் காணேடி என்கிற நிலையில் இருப்பதைக் குறிக்கும்.) என்றெல்லாம் அழைக்கப்படுகிறது.

निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनम् (श्वे 6-19)
நிஷ்களம் நிஷ்கிரியம் சாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜனம்
साक्षी चेता केवलो निर्गुणश्च (श्वे 6-11)
ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணச்ச

என்கிற ஆத்மாவைப் பற்றிய சுருதி வாக்கியங்கள் தவறானவை என்றல்லவா ஆகிவிடும்! சுஷுப்தியில் ஆத்மா இருந்தபோதிலும் கர்த்ருத்வம் காணவில்லை. அக்னியில் உஷ்ணம் இயற்கையாகவே உள்ளதுபோல் ஆத்மாவில் கர்த்ருத்வம் இருக்குமேயாகில் சுஷுப்தியிலும் அது காணப்பட வேண்டுமல்லவா! அப்படிக் காணப்படாததால் ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் இயற்கையானதன்று. இயற்கை குணம் அதன் தன்மை ஒருபொழுதும் அப்பொருளைப் பிரிந்து இருக்க முடியாது.

துவைதத்தில், சகுண உபாசனையில் "எல்லாம் அவன் செயல், அவனன்றி ஓரணுவும் அசையாது, எல்லாம் நன்மைக்கே, நன்றே செய்வாய், பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகம், இராமன் இச்சைப்படி எல்லாம் நடக்கின்றன" என்று சொல்லுகிறார்கள். ஈசுவரன் பஞ்ச கிருத்தியங்களைச் செய்கிறார். ஆனால்

நிர்குண உபாசனையில், அத்வைதத்தில் 'பிரம்மம் பிரபஞ்சமாகவே வடிவு எடுக்கவில்லை, அது யாண்டும் இருந்தபடி இருக்கிறது' என்கிறார்கள். அங்கு பஞ்சகிருத்தியங்களும் இல்லை. அந்நிலையில் அது நிஷ்கிரியா, நிர்விகார, நிஷ்பிரபஞ்ச, நிராலம்பப் பொருளாக இருக்கிறது. அது சத்-சித்-ஆனந்தமாக இருக்கிறது. தினம் நாம் ஆழ்ந்து தூங்கும் போது இப்பிரபஞ்சம் என்ன ஆகிறது? பிரபஞ்சம் கனவு போன்றது, அதற்கு நித்தியத்துவம் இல்லை, வெறும் காட்சி என்பதற்கு நமது சுஷுப்தி அவஸ்தையே சான்றாகும். நமக்கு உறுதியானதாகவும், மிகவும் உண்மையானதாகவும் படுகிற, உணர்கிற ஜாக்கிரதாவஸ்தையும் நிலையற்றதே. நமது ஜீவிதத்தில் கடந்துபோன நிகழ்ச்சிகளுக்கும் கனவுக்கும் என்ன வித்தியாசம்? ஜாக்கிரதமும் சொப்பனம் போன்றதே என்று அத்வைதிகள் விளக்குகிறார்கள். ஜீவபோதத்தைத் துடைப்பதற்கு இவ் இரண்டுவித வியாக்கியானங்களும், உணர்வுகளும், பாவங்களும் நன்கு பயன்படுகின்றன.

கேள்வி : சுஷுப்தியில் கர்த்ருத்வம் ஆத்மாவில் தோன்றாததற்குக் காரணம் வேலை செய்யும் கரணம், மனது ஒடுங்கிவிடுவதுதான். தச்சன் ஒருவன் தச்சுவேலை செய்யும் சக்தி உடையவனாக இருந்தும், கையில் கருவிகளை வைத்துக்கொண்டு தச்சுவேலை செய்யாமல் ஸ்நானம், போஜனம் முதலியவை செய்யும் போது அவன் தச்சுவேலை செய்பவனாக நமக்குத் தோன்றுவதில்லை. ஆனாலும் அவன் தச்சன் தான். அதுபோல சுஷுப்தியில் மனமொடுங்கிய காரணத்தால் ஆத்மாவில் கர்த்ருத்வம் தோன்றாத போதிலும் ஜீவாத்மா கர்த்தா தான்.

பதில் : அப்படியன்று. தச்சன் தன் ஆயுதங்களை உபயோகிப்பது போல ஆத்மா பஞ்சேந்திரியங்களையும் அந்தக்கரணத்தையும் உபயோகிக்கவில்லை. ஆத்மாவின் சன்னிதியில் அவைகள் தொழில் செய்வது போலக் காணப்படுகின்றன. ஒரு இருட்டறையில் ஜன்னல்களைத் திறந்ததும் வெளிச்சம் வருகிறது. அறை பிரகாசமானதாகிறது. அதற்குக் கர்த்தா ஜன்னல் அன்று, அந்த வெளிச்சம் ஜன்னலுடையதன்று; அது சூரியனுடையது. அது போல ஆத்மாவின் சன்னிதியில் பிரகிருதி தொழில் செய்கிறது, செயல்படுகிறது. ஆகையால் கர்த்ருத்வம் ஆத்மாவைச் சேராது. இந்திரியங்களும், மனம், வாக்கு, காயம் என்கிற திரிகரணங்களும் ஜன்னல் போன்றவைகள். அவைகளை ஜீவாத்மன் பயன்படுத்துகிறான். அவைகளும் கனவுபோன்றவையே, மாயையே.

ஒருவேலையும் செய்யாமல் சும்மா இருக்கும் போது (தூஷ்ணீம் பாவம்) அந்தக்கரணத்துடன் சேர்ந்து இருந்தபோதிலும் ஆத்மாவிடம் கர்த்ருத்வம் தோன்றாததால் அதற்குக் கர்த்ருத்வம் (காரியம் செய்யும் தன்மை) இயற்கையானதன்று. இது ஆத்மாவின் பேரில் சுமத்தப்பட்டதேயாம். இது வேதாந்த பரிபாஷையில் அத்தியாஸம் எனப்படுகிறது. பக்தியில் மேலே போய்விட்டாலும் சரி, பரபோதத்தில் மேலே போய்விட்டாலும் சரி, தியானப் பயிற்சியில் மேலே போய்விட்டாலும் சரி அவர்களும் மற்ற ஜீவர்களைப்போல நடமாடுகிறார்கள், உண்கிறார்கள், பேசுகிறார்கள். இந்திரியங்கள், அந்தக்கரணங்கள் அவர்களிடம் இருக்கின்றன. ஆனால் அவர்களிடம் கர்த்ருத்வம் இல்லை. கர்த்ருத்வம் இல்லாதநிலை ஆத்மாவின் நிஜமான நிலை. அவர்கள் ஆத்மச் சிந்தனையில் மூழ்கியிருப்பதால் அவர்களும் கர்த்ருத்வம் இல்லாதவராகின்றனர். இதை நாம் பிரத்யக்ஷமாகப் பார்க்கிறோம்.

பகவத்கீதையில் ஐந்தாவது அத்தியாயத்தில் 8 முதல் 11 முடிய உள்ள நான்கு சுலோகங்கள் இக்கருத்தை நன்கு விளக்குகின்றன.

कायेन मनसा बुद्धया केवलैरिन्द्रियैरपि ।
योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वा आत्मशुद्धये ॥

காயேன மனஸா புத்த்யா கேவலைரிந்த்ரியைரபி
யோகின: கர்மகுர்வந்தி ஸங்கம் த்யக்த்வா
ஆத்மசுத்தயே

வெறும் காயத்தாலும், மனதாலும் புத்தியாலும் இந்திரியங்களாலுமே பற்றைத் துறந்து, சித்த சுத்திக்காக யோகிகள் கர்மம் செய்கிறார்கள். ஆத்மா செயலற்றது, கர்த்ருத்வம் அற்றது.

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति
भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया

ஈச்வர:ஸர்வபூதானாம்ஹ்ருத்தேசேஅர்ஜுனதிஷ்டதி ப்ராமயன் ஸர்வ பூதானி யந்த்ராருடானி மாயயா இது கீதா சுலோகம்.

ஈசுவரன் உயிர்களை எல்லாம் உடல் என்னும் யந்திரத்தில் ஏற்றி மாயையினால் ஆட்டிக் கொண்டுஅவைகளின் உள்ளத்தில்இருக்கிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஜீவாத்மா கர்த்ருத்வம் அற்றது, அது ஆட்டுவிக்கப்படுவது. இருகருத்துக்களும் ஜீவபோதத்தை, கர்மபந்தத்தை அழிப்பதற்கு உபாயங்களே ஆகும்.

இனி அத்தியாசம் என்றால் என்ன என்று விளக்குகிறார்கள். ஒன்றின் காரியம், சுபாவம் மற்றொன்றின் பேரில் சுமத்துவது, மற்றொன்றின் காரியம் போன்று தோன்றுவது அத்தியாசம் எனப்படுகிறது. படகு ஒன்று நதியில் போய்க்கொண்டிருக்கிறது. அதில் பயணம் போகிறவனுக்குக் கரையில் உள்ள மரங்கள் பின்னால் போவதுபோல்தெரிகின்றன.உண்மையில் மரங்கள் நிலைத்தினை, அப்படியே இருப்பவை. படகுதான் நகர்கிறது. ரயிலில் பிரயாணம் செய்யும்போதும் இதே காட்சி உண்டாகிறது.ரயிலில் போகும்பொழுது கீழே குனிந்து பார்த்தால் தரை வேகமாக ஓடுவதுபோல் தோன்றுகிறது. ஆனால் வண்டிதான் ஓடுகிறது. சந்திரனைப் பார்த்துக்கொண்டே நாம் நடந்து போனால் அது நம்முடன் வருவதுபோல் தோன்றுகிறது.ஆனால் உண்மையில் அது நம்முடன் வரவில்லை.இங்ஙனம் ஒன்றின் செயல் அல்லது இயக்கம் மற்றொன்றினுடையதாக தோற்றமளிப்பதற்கு அத்யாசம் என்று பெயர். அதே போன்று திரிகரணங்களின் கர்த்ருத்வத்தை ஆத்மாவின்பேரில் நாம் காண்கிறோம்.இதற்குக் காரணம் அக்ஞானம். ஆத்மாவுக்கு கர்த்ருத்வம் இல்லை. அத்யாசத்தால் அதற்குக் கர்த்ருத்வம் ஏற்பட்டது.

**கேள்வி:** திரிகரணங்களும் ஜடப்பொருள்கள், அசேதனமானவை. அதற்கு எப்படி செய்கை என்கிற குணம் ஏற்படும்? மேலும் உலகில் கர்த்தாவானவன் கரணங்களால்தான் காரியம் செய்கிறான். இந்த மூன்று கரணங்களைக் கர்த்தா என்று சொன்னால் அதற்கு வேறு கரணங்கள் இருக்கவேண்டுமே, அவை எவை?

**பதில்:** பெருங்காற்று பெரிய மரங்களை வேருடன் பிடுங்கி வெகு தூரத்தில் தள்ளிவிடுகிறது. ஜலப் பிரவாகம் மிகப் பெரிய மரங்களையும் சாய்த்து விடுகிறது, நீரோட்டத்தில் சுமந்து வெகுதூரம் கொண்டு போகிறது. இந்த இரண்டு பூதங்களும் அசேதனமாக, ஜடமாக வேறு கருவி கரணங்கள் இல்லாதவையாக இருந்தபோதிலும் இங்ஙனம் செயல் புரிகின்றன, கர்த்தா ஆகின்றன. அதே போல மனிதனுடைய திரிகரணங்களும் ஜடமாக, அசேதனமாக, இருந்தபோதிலும், அவற்றிற்கு அவயவம் இல்லாத போதிலும் கர்த்தாக்களாக ஆகின்றன. ஆனால் அவைகளுக்குக் கர்த்ருத்வம், காரியம் செய்கிறோம் என்கிற உணர்வு, புத்தி இல்லை. ஆனாலும் மேற்குறித்த செயல்களுக்குக் காரணம், கர்த்தா ஆகின்றன.

பகவத்கீதையில் 'नान्यं गुणेभ्यः कर्तारं (*14–19*) குணங்களுக்கு அன்னியமான கர்த்தா இல்லை, गुणा वर्तन्त इत्येव குணங்களே தொழில் புரிகின்றன (*14–23*), गुणानेतान् अतीत्य त्रीन् देही देहसमुद्भवान् (*14–20*), உடம்பை உண்டாக்கும் இம் முக்குணங்களையும் கடந்து' என்று குணங்களைக் கர்த்தாவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.வேதாந்த விசாரத்தில் கேள்வி மூலம் தத்துவ விசாரம் செய்துபடிப்படியாகச் சரியான உண்மை நிலைநாட்டப்படுகிறது. இம் முறையில் விஷயத்தின் பல அம்சங்களும் அலசி ஆராயப்படுகின்றன. அதனால் அவைகள் சரியான முடிவை, உண்மையைச் சொல்ல முடிந்தன. ஆத்மா செயலற்றது, கர்த்ருத்வம் அற்றது. அது நிஷ்பிரபஞ்சப் பொருள், ஏகமாய் நிர்விகாரமாய் கேவல அவஸ்தையில் அது யாண்டும் இருக்கிறது. இப் பிரபஞ்சம் முழுவதும் வெறும் தோற்றம் என்பதுதான் முடிவான விஷயம்.

முக்குணங்களுக்குக் கட்டுண்ட நிலையில் நம்மிடம் கர்த்ருத்துவம் இருக்கத்தான் செய்யும். அப்பொழுது நம்முடைய செயலின் பயனை ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்து பழகவேண்டும். முக்குணங்களையும் கடந்து ஆத்மசொருபத்தை உணரும் பொழுது நாம் கர்த்ருத்வத்தைக் கடந்து ஆத்மானந்த நிலையில் இருக்கின்றோம்.

---

# கர்நாடக யாத்திரை

( சுவாமி சாந்தானந்தர் )

[ 80 ஆம் பக்கத் தொடர்ச்சி ]

தமிழ்நாட்டில் முருகப்பெருமானுக்கு ஆறு படைவீடுகள் எனப் பெயர் பெற்ற ஆறு சிறந்த க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. அதே போன்ற சிறப்புடைய கர்நாடக க்ஷேத்திர மாகிய சுப்பிரமணிய ஸ்தலத்தில் இரவு தூங்கி எழுந்தோம். க்ஷேத்திரத்தின் பெயரும் சுப்பிர மணியா. விடியற்காலம் ஐந்து மணிக்கு எழுந்து, காலைக்கடன்களை முடித்து, கோவிலைச் சுற்றி ஓடும் குமாரதாரா நதியில் குளித்தோம். ஆலயத்தில் ஏழு மணிக்குத்தான் சுவாமி தர்சனம் பண்ண முடியும். அதுவரையில் நாங்கள் வெளிப்பிரகாரத்தில் உட்கார்ந்து ஐக்கிய வணக்கம் செய்தோம். ஐக்கிய வணக்கம் மனதுக்கு ரம்மியமாய் இருந்தது. கோவில் மலையாளதேசக் கோவில்கள் அமைப்பில் ஓடு வேய்ந்த கூரையுடன் இருக்கிறது. மூலஸ்தானத்தில் கீழே ஆதிசேஷன், அதற்கு மேலே வாசுகி, அதற்கு மேலே சுப்பிரமணியர் சிறிய வடிவம் உள்ளது. உள் சுற்றுப்பிரகாரத்தில் சன்னிதிக்கு வலப்புறம் நரசிம்மர், தசாவதாரம், ஆஞ்சநேயர் சன்னதிகள் உள்ளன. இடப்புறம் உள்ள சன்னதியில் கீழே உமா மகேஸ்வரர், அதன்மேல் விநாயகர், அதன்மேல் அம்பாள் இப்படி உள்ளன. சங்கரர் ஸ்தாபித்த ஆறு சமயங்களுக்கும் ஒருங்கே இங்கு மூர்த்திகள் அமைத்துள்ளார்கள். சுப்பிரமணியர் கோவிலுக்குச் சற்று தூரத்தில் ஆதி சுப்பிர மணியர் கோவில் உள்ளது. அங்கு மூலஸ்தானத்தில் புற்று உள்ளது. முருகன் சூரபத்மன் முதலிய அசுரர்களைக் கொன்றுவிட்டு இந்திரன் மகளாகிய தேவசேனவை மணம் முடித்துக்கொண்ட இடம் சுப்பிரமணிய க்ஷேத்திரம். வாசுகி என்னும் சர்ப்பராஜன் பாற்கடல் கடையும் போது மந்திரமலைக்குக் கயிருக இருந்தது ; திரிபுர சம்ஹாரத்தின்போது தேவர்கள் உண்டாக்கிய வில்லுக்கு நாண் கயிருக இருந்தது. இங்ஙனம் அது தேவகாரியத்துக்குப் பயன்பட்ட ஒரு ஜீவன். அது ஒரு சமயம் கருடனுடன் எதிர்த்துப் போர்புரிய நேரிட்டது. கருடனுடன் சமாளிக்க முடியாமல் சர்ப்பராஜன் ஏங்கித் தவித்தது. மானுடப் பிரயத்தனங்கள் எல்லாம் பயனற்றுப் போகிற காலத்தில் இறைவனே கதி என்று உறுதியாகப் பிடிக்கிற தன்மை வருகிறது. அங்ஙனம் அது இறைவனைக் குறித்து ''என் ஜீவிதத்தைப் பயனுள்ள முறையில்தான் கழித்து வந்தேன். நான் வீணுக்கு வாழ்ந்தவன் அல்லன். என் வாழ்வு இங்ஙனம் கதியற்ரு முடியவேண்டும். இறைவா நீயே கதி'' என்று பிரார்த்தித்தது. அப்போது சிவபிரான் தோன்றி 'கருடா, அவன் நல்லவன், பக்தன். அவனை விட்டுவிடு' என்று சொன்னர். கருடனும் அடிபணிந்து விட்டுச் சென்றது. பக்தியால் கண்ணீர்மல்கி நின்ற வாசுகியிடம் இறைவன் இங்ஙனம் கூறினர். ''சர்ப்பராஜனே, நீ சுப்பிர மணியா சென்று அங்கு ஷண்முகனைக் குறித்துத் தவம் செய். சூரசம்மாரம், தேவசேன திரு மணம் எல்லாம் நிகழும். அப்போது சுப்பிர மணியன், பாற்கடலில் ஸ்ரீ விஷ்ணு ஆதி சேஷன் மேல் பள்ளிகொண்டிருப்பது போல, உன்மீது வீற்றிருப்பான். உன்னைத் தனது ஆசனமாக ஏற்றருள்வான். அப்போது நீ நிரந்தரமாக உலகபயம், பந்தம் அற்று வாழ்வாய்.'' அங்ஙனமே எல்லாம் நிகழ்வனவாயின. மானுட சரீரம் எடுத்த ஜீவன்கள் எல்லாம் உலகுக்குப் பயனுடைய வாழ்வு வாழவேண்டும், சன்மார்க்கத்தில் வாழவேண்டும். அப்போது அவை பிரபஞ்ச சாகரத்தினின்று எல்லாப் பயங்களினின்றும், துன்பங்களினின்றும் விடுபட்டு இறைவனை அடைகின்றன, என்கிற பாடத்தை வாசுகி மானுடருக்கு ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கிறது. இது இந்த க்ஷேத்திரத்தின் ஸ்தல புராணம். 'சுப்பிரமணியா, குமரா, ஷண்முகா எங்கள் வாழ்வும் இங்ஙனம் பரோபகாரமானதாக அமைய அருள் புரி' என்று எல்லாரும் பிரார்த்தித்தோம். வழிபாடு, தர்சனம் எல்லாம் முடித்துக்கொண்டு விடுதிக்கு வந்தோம். எல்லாரும் ஹோட்டலில் காலைச் சிற்றுண்டி சாப்பிட்டோம், பத்து மணிக்கு அங்கிருந்து

புறப்பட்டு 12-30 மணிக்குத் தர்மஸ்தலா வந்து சேர்ந்தோம். பஸ்ஸைவிட்டு இறங்கியதும் நேரே கோவிலுக்குச் சென்றோம்.

கோவில்வாசல் ஒரு மடத்தின் வாயில்போல் உள்ளது. உள்ளே கேரளக்கோவில்கள் பாணியில் கூரை வேயப்பட்டுள்ளது. அங்கே எழுந்தருளியுள்ள இறைவன் மஞ்சுநாதர் லிங்கம் தங்கத்தால் ஆனது. இரு பக்கங்களிலும் உற்சவ மூர்த்திகள் உள்ளன. சன்னிதிக்குப் பின்னால் பிள்ளையார் இருக்கிறார். சுவாமி சன்னிதிக்கு இடப்பக்கம் அம்பாள் கன்னியாகுமரி சன்னிதி உள்ளது. அம்பாள் அழகிய தங்க விக்ரகத்தில் பிரசன்னமாயிருக்கிறாள். ஆலயம் முழுவதும் சுத்தமாக இருக்கிறது; சேவார்த்திகள் முறையாக நடந்துகொள்கின்றனர். நண்பகல் பூஜை பார்த்து ஆனந்தமடைந்தோம்.

சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு பழனியில் சாது சுவாமிகள் வெகு சிறப்பாக அன்னதான கைங்கரியம் நடத்திக்கொண்டிருந்தார்கள். தஞ்சை ஜில்லாவில் முன்பு பல ஆதீனங்களில் அன்னதானம் சிறப்புற நடத்தி வந்தார்கள். நம் ஆலயங்களில் குறிப்பிட்ட அளவு பிரசாதம் அன்னதானமாக வழங்கப்பட்டு வந்தது. திருவனந்தபுரத்தில் ஆலயங்களைச் சுற்றிப் பெரிய அன்ன சத்திரங்களும் மிகப் பெரிய பாத்திரங்களும் பார்த்து ஆச்சரியப்பட்டிருக்கிறோம். இவை யாவற்றையும்விடச் சிறப்பாகவும் உயர்தரமாகவும் தர்மஸ்தலத்தில் அன்னதானம் நடைபெற்று வருவது குறிப்பிடத்தக்கது. வடநாட்டில் சொர்க்காச்ரமம் போன்ற இடங்களில் சாதுக்களுக்கு மிகவும் மரியாதையும் உணவும் இருப்பிடமும் தருகிறார்கள். அதேபோல இங்கு வருகிற எல்லாவித மக்களுக்கும் மூன்று நாட்களுக்கு உணவும் இருப்பிடமும் இலவசமாகத் தருகிறார்கள். நாள் ஒன்றுக்கு மூவாயிரம் பேருக்கு மேல் போஜனம் நல்ல முறையில் நடைபெறுகிறது. இது எவ்வளவு பெரிய கைங்கரியம் பாருங்கள். இந்தத் தர்மத்தைச் செய்கிறவர்கள் ஹெக்டே என்னும் குடும்பப் பெயர்கொண்ட ஜைன மதத்தினர், கிரஹஸ்தர்கள் ஆவார்கள். ஹிந்து ஆலயத்தைக் கட்டி அதை யாத்திரை ஸ்தலம் ஆக்கி, வருகிறவர்களுக்கெல்லாம் அன்னமிட்டு, தங்க இடம்தந்து உபசரிக்கிறார்கள். கோவில் சிவன் கோவில். அர்ச்சகர்கள் வைஷ்ணவர்கள். நிர்வாகிகள் சமணர்கள். எவ்வளவு மத சமரசம் நிலவுகிறது பாருங்கள். பத்ராசல பக்த ராமதாஸர் காலத்தில் நவாப் ராம பக்தன் ஆனான். ஏரிகாத்த ராமன் ஆங்கிலேய கிறிஸ்தவக் கலெக்டருக்குக் காட்சி தந்து அவனைப் பக்தராக்கினார். வேளாங்கண்ணியில் அன்னை மேரியை ஹிந்துக்கள் வழிபடுகிறார்கள். நாகூர் ஆண்டவரை ஹிந்துக்கள் வணங்குகின்றனர். கதிர்காமத்தில் முருகப் பெருமானைப் பௌத்தர், கிறிஸ்தவர், முஸ்லீம்கள், சிங்களர் ஆகிய எல்லாரும் வழிபடுகிறார்கள். மேல் கோட்டையில் எழுந்தருளியுள்ள பெருமாளிடம் துலுக்க நாச்சியார் அன்பு செய்து ஈடுபட்டு ஆண்டாள் போன்று பெருமாளுடன் ஐக்கியமாகி விட்டவரலாறு கேட்டிருக்கிறோம். வருங்காலத்தில் மத சமரசம் இன்னும் பரவலாக நிலவும். தங்குமிடங்களும் சாப்பிடும் இடங்களும் வெகுசுத்தமாக உள்ளன. அன்பர்கள் தாமாக மனமுவந்து தரும் நன்கொடைகளை ஏற்றுக்கொள்கிறார்கள். இந்த அன்னதான கைங்கரியத்துக்கு மேல் அது வருகிறது. அதிகப்படி வருவாயைக் கல்விஸ்தாபனங்கள் நடத்துவதில் செலவிடுகிறார்கள். அவர்கள் ஏழு கல்லூரிகளையும், ஒன்பது பள்ளிகளையும் நடத்துகிறார்கள். தங்களுடைய சம்பாத்தியத்தில் ஒவ்வொருவரும் ஒரு பகுதியை, ஏதோ ஒரு நல்ல காரியத்துக்குப் பயன்படுத்த வேண்டும். அதன் மூலம் நம்மிடம் பல நற்குணங்கள் விருத்தியடைகின்றன. பெரிய செல்வந்தர்களுக்கு இங்கு ஒரு பாடம் இருக்கிறது. தர்மஸ்தலாவில் மக்களுக்கு உணவு அளிப்பது மட்டுமின்றி தெய்வ பக்தியிலும் மக்களை ஈடுபடுத்துகிறார்கள். ஆத்மார்த்தமான கைங்கர்யங்களே தலைத்தரமான பயனுடையவையாகும்.

ஆயிரம் வருஷங்களுக்குமுன்பு குடுமபுரத்தில் ஹெக்டே குடும்பத்தில் பரமன்ன ஹெக்டே என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அப்பகுதியின் தலைவராக இருந்தார். அவருக்குத் தர்ம தேவதைகளின் தர்சனம்கிடைத்தது. 'காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே' என்னும் ஒருவாக்கியம் பட்டினத்தாரின் வாழ்க்கை

யின் திசையை மாற்றிவிட்டதுபோன்று, அந்தத் தர்சனம் அத்தலைவரைப் புதியவழியில் நடாத்துவதாயிற்று. அன்று ஆரம்பித்த அன்னதான கைங்கர்யம் இன்றும் மகோன்னதமாக நடந்து வருகிறது. அந்தக் குடுமபுரம்தான் ஹெக்டேயின் அன்னதானத்தால் தர்மஸ்தலா ஆகிவிட்டது. தங்கள் மதத்திற்கும் அவர்கள் இப்பொழுது ஒரு கைங்கர்யம் பண்ணி வருகிறார்கள். சிரவணபெலகோலாவில் உள்ள கோமதீஸ்வரர் சிலை போன்ற ஒரு சிலையை முப்பத்தொன்பது அடி உயரத்தில் செய்து தர்மஸ்தலாவில் ஒரு குன்றின்மீது ஸ்தாபித்துள்ளார்கள். அதைச்சுற்றி ஆலயம் எழுப்பும் வேலையும் நடைபெற்று வருகிறது. அச்சிலை மிகவும் அழகாகவும் வேலைப்பாடு மிக்கதாகவும் இருக்கிறது. இறைக்கிற கிணறு ஊறும். நீ நல்ல காரியம் பண்ணிக்கொண்டே இரு, துணை வந்துகொண்டே இருக்கும் என்பவையெல்லாம் இங்கு பிரத்யக்ஷமாக்கப்பட்டிருக்கின்றன. அவர்களுடைய கைங்கர்யம் என்றென்றும் சிறப்பாக நடைபெற்றுவர இறைவன் அருள்புரிவார்.

நண்பகல் பூஜைக்குப் பிறகு எங்களைச் சாப்பாட்டிற்கு அழைத்துச் சென்றனர். நாங்கள் பரிமாறிய பொழுது நாமஜபம் சொல்லிக் கொண்டிருந்தோம். பரிமாறி முடிந்த பின் பிரம்மார்ப்பணம் சொல்லிவிட்டுச் சாப்பிட்டோம். இது அவர்களுக்குத் திருப்தியளித்தது. தற்சமயம் வீரேந்திர ஹெக்டே என்பவர் அதிபதியாக இருந்து நிர்வகித்து வருகிறார். அவருடைய அலுவலகத்தில் தமக்கு அன்பளிப்பாக வருகிற சாமான்களையெல்லாம் கண்காட்சிக்காக வைத்துள்ளார். பக்தர்கள், ஆழ்வார்கள், கீதாசாரியன் படங்கள் உள்ளன. அவைகள் எல்லாம் பார்க்க அழகாக இருக்கின்றன. அந்த அறை முழுவதும் கண்ணாடி பதித்துள்ளார்கள். அக்கண்ணாடி முன் நிற்கும் உருவம் அங்கு ஏககாலத்தில் பலப்பலவாக அக்கண்ணாடிகளில் தெரிகிறது. இதுமாதிரியான கண்ணாடி அறை ஸ்ரீரங்கத்திலும் இருக்கிறது. கடவுளே இத்தனையும் ஆகியிருக்கிறார் என்ற கருத்து கண்ணாடி அறையின் மூலம் புகட்டப்படுகிறது. இக்கோயில் தர்சனத்துக்குப் பின் விடுதிக்குச் சென்று ஓய்வெடுத்தோம்.

மாலை நான்கு மணிக்கு அங்குள்ள நேத்ராவதி நதியில் குளித்தோம். புதிதாக நிர்மாணிக்கப்படுகிற, மலைமேல் உள்ள கோமதீஸ்வரரைப் பார்த்தோம். நெல்லியாடிபீடு என்கிற ஹெக்டேயினரின் மூதாதையர் இல்லம் பார்த்தோம். அங்குதான் பரமன்ன ஹெக்டேக்குத் தர்மதேவதைகளின் காட்சி கிடைத்தது. அவ்விட்டிற்கு அருகில் ஜைன தீர்த்தங்கரர்களில் எட்டாவது தீர்த்தங்கராகிய சந்திரநாதரின் ஆலயத்திற்குச் சென்றோம். பிறகு விடுதிக்குச் சென்று ஐக்கிய வணக்கம் செய்துவிட்டு ஆலயத்திற்கு இரவு பூஜை பார்க்கப் போனோம். வெகுஆனந்தமாக சுவாமிதர்சனம் கிடைத்தது. பக்தர்கள் கொண்டுவந்த வேண்டுதல் காணிக்கைகளை அவர்களிடமிருந்து ஆலயத்தில் கடவுள் முன்நின்று ஹெக்டே குடும்பத்தினர் ஒருவர் வாங்கிக்கொள்கிறார். அந்நிகழ்ச்சி தினம் குறித்த நேரம் வரை நடைபெறுகிறது. அவைகள் முறையே கணக்கு வைக்கப்பட்டு தர்மத்தில் சேர்ந்து விடுகின்றன. நீதிமான்கள், நேர்மையானவர்கள் வணக்கத்துக்குரியவர்கள் ஆகிறார்கள். தர்மஸ்தலம் தனிப்பட்டவர்கள் கோவில். நன்கு நிர்வகிக்கப்படுவதால் அரசாங்கம் எடுக்கவில்லை. இது பிரார்த்தனை ஸ்தலம். வாக்கு நாணயம் மிகவும் முக்கியம். மஞ்சுநாத சுவாமியின் பேரால் சத்தியம் செய்துவிட்டால் அது நிறைவேறியே ஆகவேண்டும். மூளைக் கோளாறு, பேய் பிசாசு, பில்லி சூன்யம் இவற்றால் துன்புறுகிறவர்கள் இங்கு நிவர்த்தி அடைகிறார்கள். நல்ல கைங்கரியங்கள் மூலம் நம் அகங்கார மமகாரங்கள் துடைக்கப்படுகின்றன. கடவுளே உடையவர், நாம் அவருடைய உடைமைகள். பணக்காரர்கள் அந்தச் செல்வத்துக்கு டிரஸ்டிகளே, தர்மகர்த்தாக்களே தவிர உடையவர்கள் அல்லர். நல்ல டிரஸ்டிகளாக இருந்து செல்வத்தை நல்ல வழியில் செலவிடவும் விருத்தியாக்கவும் செய்தால் அவர்களுடைய வாழ்வு மேன்மையடைகிறது. ஊசியின் காதில் ஒட்டகம் ஒன்று நுழைந்து அப்பக்கம் வந்து விடலாம். ஆனால் பணக்காரன் மனதில் ஈசுவர சிந்தனையே நுழையாது என்பார்கள். பணம் அன்று, பணம் பற்றிய பற்றுதல் தான் நுழைய விடாது. பணத்தின்மேல் பற்றுதல் ஆகாது. பணம்

மனிதனை உண்டாக்கவில்லை, மனிதனே பணத்தை உண்டாக்கியிருக்கிறான். பணம் நமக்கு எஜமானன் ஆகிவிடலாகாது. நாம் பணத்தின் எஜமானர்களாக இருக்கவேண்டும். தனக்கென்றே பணத்தைப் பயன்படுத்துகிற வன் பாழாகிறான். பரோபகாரத்துக்காகத் தன் செல்வத்தைச் செலவிடுகிறவன் நன்மை அடை கிறான் என்கிற கருத்துக்கள் எல்லாம் இங்கு மனதில் புதுப்பிக்கப்படுகின்றன. போஜன சாலையில் இரவு உணவு சாப்பிட்டபின் புனித மான எண்ணங்களுடன் விடுதிக்குத் தூங்கச் சென்றோம். எவ்வளவு வசதியான இடம்! ஜல வசதியும் மற்ற வசதிகளும் பொருத்தமாக உள்ளன. இன்னும் தங்குமிடங்கள் கட்டிக் கொண்டே இருக்கிறார்கள். தர்மம் என்றால் இதுதான் தர்மம். கைம்மாறு கருதாமல், பலனை எதிர்பாராது ஈசுவர ப்ரீதியர்த்தம், அன்புக்காக அன்பு, சேவைக்காக சேவை செய்து வருவது அவர்களின் மகிமையாகும். ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் கைங்கரியம் செய்துவரும் அக்குடும்பம் இன்னும்பல்லாண்டு பல்லாண்டுகளுக்குப் பக்தர்களுக்குக் கைங்கரி யம் பண்ணிவர மல்லாண்ட திண்தோள் மணி வண்ணன் திருக்காப்புச் செய்வானாக என்று அவனது சேவடிகளை வேண்டிக்கொண்டு தூங்குகிறோம்.

22-9-77 அன்று எங்களைத் தினம் காலையில் எழுப்பி விடுகிற கடமை உள்ளவர் ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்! ஆதிசக்தி மஹா சக்தி பராசக்தி ஓம் என்று பாடிக்கொண்டு எங்க ளைச் சுற்றி வருகிறார். நாங்கள் தெய்வச் சிந்தனை யோடு எழுந்திருக்கிறோம். 5 மணிக்குத் தர்மஸ்தலாவிலிருந்து புறப்பட்டு 7-45 மணிக் குக் கடில் என்னும் அம்பாள் க்ஷேத்திரத்துக்கு வந்து சேர்ந்தோம். கடில் என்றால் நடு, மத்தி என்று அர்த்தமாம். நந்தினி என்னும் நதி யின் மத்தியில் இக்கோயில் அமைந்துள்ளது. ஈரோடு பக்கம் காவேரியின் மத்தியில் நட்டாற்றீசுவரன் கோவில் இருப்பது போல இங்கு இக்கோவில் இருக்கிறது. நதி சிறியது தான். பாலத்தின் வழியே கோவிலை அடைந் தோம். அங்கு நதியில் நல்ல படித்துறை உள்ளது. அதில் இறங்கிக் குளித்தோம். தண்ணீர் மிகவும் சுத்தமாகவும் குளிர்ச்சியாக வும் இருந்ததால் ஆனந்தமாகக் குளித்தோம். உடல்அலுப்புத்தீர்ந்தது; மனதுக்குச் சந்தோஷ மாக இருந்தது. நதி பாறைகளின் நடுவே இறக்கத்தில் வேகமாக ஓடுவதால் அதன் ஓசை ஓங்காரம் போன்று ஒலிக்கிறது. எல் லாரும் ஒன்று கூடி அம்பாள் முன், நதியின் ஓங்கார சுருதியுடன் ஐக்கிய வணக்கம் செய் தோம். அங்குள்ள தலைமை அர்ச்சகருக்கு எங்களைப் பார்த்துப் பரமதிருப்தி உண்டா யிற்று. இக்கோயிலின் நிர்வாகத்தை அவர் தான் கவனிக்கிறார். இது தனிப்பட்டவர்கள் கோவில். அவர் எங்களுக்கு அம்பாளின் மகிமைகளையும் ஸ்தலபுராணத்தையும் சொன் னார். "இப்பக்கம் முன்காலத்தில் பஞ்சம் ஏற்பட்டது. அப்போது முனிவர்கள் காம தேனுவை இப்பூவுலகிற்குக் கொண்டு வரத் தவம் செய்தார்கள். இந்திரன் தோன்றிக் காம தேனுவுக்குப் பதில் அதன் மகள் நந்தினியை அழைத்துச் செல்லுங்கள் என்று கூறினான். ஆனால் நந்தினி 'பூலோகத்தில் மக்கள் கபடு, சூது, சுயநலம், பொறாமை ஆகிய தீமைகள் நிறைந்தவர்கள். அங்கு நான் போகமாட் டேன்' என்று மறுத்தது. முனிவர்கள் கோபம் கொண்டு நந்தினியைப் பூலோகத்தில் நதியாகப் பிறந்து ஓடிக்கொண்டிரு என்று சபித்தார்கள். நந்தினி அம்பாளிடம் முறை யிட்டாள். அம்பாள் நந்தினியைச் சமாதானம் செய்து 'நீ நல்லவள். நீ பரோபகாரியாக இருப் பதால் எந்தச் சூழ்நிலையிலும் கெட்டுவிடமாட் டாய். பூலோகத்தில் உன்னைப்பார்த்துப் பல பேர் நல்லவர்களாக ஆவார்கள். உன் பக்கத் திலேயே நானும் இருக்கிறேன். நீ கவலை கொள்ளவேண்டாம். உலக நன்மைக்காக நீ இங்கே நதியாக ஓடிக்கொண்டிரு' என்று அனுக்கிரகித்தாள். அதன்படியே ஒரு அசுர னைச் சம்ஹாரம் செய்துவிட்டு நந்தினி நதியின் மத்தியில் அம்பாள் கோயில் கொண்டுள்ளாள். அவள் அருள் நிறைந்தவள், மோக்ஷப்ரதாயினி. அம்பாள் உங்களுக்குஎல்லாநலன்களும் அருள வேண்டும்." இங்ஙனம் அர்ச்சகர் கூறினார்.

ஐக்கிய வணக்கத்தை முடித்துக்கொண்டு அம்பாளைத் தரிசித்தோம். மூலஸ்தானத்தின் முன்பு சுயம்பு லிங்கம், பின்னால் அம்பாள் துர்க்காபரமேஸ்வரி அமர்ந்த கோலத்தில்

காட்சியளிக்கிறாள். அழகிய சிறிய உருவம். சிறிய கோயில். சுற்றுப்பிரகாரத்தில் அம்மைக்கு இடப்பக்கம் விநாயகர் இருக்கிறார். அங்குக் குறிப்பிட்ட வேளைகளில், நியமப்படிதான் பூஜை தீபாராதனை செய்வார்கள். அன்பர்களுக்காக இடையில் அர்ச்சனை தீபாராதனை செய்வதில்லை. அங்கு நிறைய வளையல்கள் காணிக்கையாக வருகின்றன. அவைகளைத் தர்சனத்துக்கு வரும் பெண்பாலருக்கு அவரவர்களுக்கு ஏற்றதை அம்பிகையின் பிரசாதமாகத் தருகிறார்கள். வீட்டில் உள்ள தம் மகள், தங்கைகளுக்கு வேண்டும் என்று ஆண்கள் கேட்டால் அவர்களுக்கும் தருகிறார்கள். காணிக்கைப் பொருள்களை விநியோகம் செய்யும் இம்முறை மிக நல்லது. இங்குத் தினம் நூறுபேருக்குக் குறையாமல் அன்னதானம் நடக்கிறது. வெள்ளிக்கிழமைகளில் அறுநூறு பேர்களுக்கும் உற்சவ காலங்களில் ஆயிரம் முதல் ஆறாயிரம் பேர்கள் வரைக்கும் அன்னதானம் நடக்கிறதாம். எங்கள் கூட்டத்தினருக்கும் காலையில் அவல், பொரி, காபி தந்து உபசரித்தார்கள். இவ்வூர் மங்களூரிலிருந்து எட்டுமைல் தூரத்தில் உள்ளது. கடிலிலிருந்து எட்டுமைல் தூரத்தில் நந்தினி நதி உற்பத்தியாகிறது. ஆலயம் சுத்தமாக உள்ளது. புது மண்டபங்கள் கட்டி ஆலயத்தை விஸ்தரித்துள்ளார்கள். தமிழ்நாட்டிலுள்ள தெருக்கூத்துப் போன்று கர்நாடகப் பிரதேசங்களில் யக்ஷகான குழுவினர் புராணக் கதைகளை நடித்துக் காட்டுவார்களாம். அம்பாளை மீண்டும் தரிசித்துவிட்டுப் புறப்பட்டோம். எங்கள் திட்டப்படி பன்னிரண்டு மணிக்கு மங்களூர் வந்துசேர்ந்தோம்.

காளிக்கட்டம் என்பது எப்படிக் கல்கத்தா ஆனதோ அப்படி மங்களாதேவியின் ஊர் என்பது மங்களூர் ஆகிவிட்டது. மங்களூரின் அதிஷ்டான தெய்வம் மங்களாதேவி. அம்பிகையின் கோவில் பழுதடைந்த நிலையில் உள்ளது. சிறிய கோவில்தான். அதற்கு இப்பொழுது தர்மகர்த்தாவாக உள்ளவர் எங்களுள் ஒருவருடன் வியாபாரத் தொடர்பும், நட்பும் உள்ளவர். சுவாமிகளுடன் கூடித் தன் நண்பரும் மற்றும் அன்பர்களும் சேர்ந்து ஐம்பதுபேர் அங்குத் தர்சனத்துக்கு வருவது தெரிந்து அவர் மிகவும் அன்புடன் உணவுக்கும் தர்சனத்துக்கும் ஏற்பாடு செய்திருந்தார். மேள வாத்தியம், பூரணகும்ப மரியாதையுடன் எங்களை வரவேற்றார். இறைவனின் அடியார்களுக்கு இந்தியா அவ்வளவு மதிப்புத் தருகிறது. அம்பாள் முன்பு ஆனந்தமாக ஐக்கிய வணக்கம் செய்தோம். அப்போது அம்பாளுக்கு அலங்காரம் செய்துகொண்டிருந்தார்கள். ஐக்கிய வணக்கத்திற்குப் பிறகு தீபாராதனை நடந்தது. அம்பிகை வெள்ளிக் கவசத்துடன் மிகவும் அழகாகக் காட்சியளித்தாள். வழிபாட்டிற்குப் பிறகு எங்களுக்குப் பகல் உணவு அன்புடன் படைத்தார்கள். உணவுக்குப் பிறகு பக்கத்தில் இருந்த ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமத்திற்குப் போனோம். அங்கு ஓய்வுக்குப்பின் ஐக்கிய வணக்கம் செய்தோம். அங்கிருந்து மங்களாதேவி ஆலய தர்மகர்த்தா தம் செலவில் கட்டி முடித்துள்ள காளிகாப் பரமேஸ்வரி ஆலயத்துக்குச் சென்றோம். சிறிய ஆலயமெனினும் அழகாகவும் சுத்தமாகவும் இருக்கிறது. நன்கு புஷ்ப அலங்காரம் செய்திருந்தார்கள். அங்குமேளதாளத்துடன் வரவேற்றார்கள். தீபாராதனை, தர்சனம்முடிந்தபிறகு ஒரு மண்டபத்தில் அமர்ந்து பஜனை செய்தோம். அவ்வூர்த் தாய்மார்களும் அன்பர்களும் பலபேர் வந்திருந்தார்கள். அவர்களும் கொஞ்ச நேரம் பஜனை செய்தார்கள். அவர்களுடைய மனம்போல் பஜனையும் இனிமையாக இருந்தது. அப்போது அவர்களுக்குச் சிறிது நேரம் உரை நிகழ்த்தப்பட்டது. "துன்பம் இல்லாத மானுட வாழ்வு இல்லை. கஷ்டத்தைப் போக்கு என்று அம்பாளிடம் வேண்டக்கூடாது. கஷ்டமில்லாமல் முன்னேற்றமில்லை. கஷ்டத்தைச் சமாளிக்கும் சக்தியை, தாங்கக்கூடிய சக்தியைக் கொடு என்று பிரார்த்திக்க வேண்டும். பிரஹ்லாதன் நாராயண மந்திரத்தால், நாராயண ஸ்மரணையால் எல்லாக் கஷ்டங்களையும் வென்றான்" என்கிற கருத்து விரிவாகச் சொல்லப்பட்டது. பஜனை முடிந்ததும் பாலும் பழமும் வழங்கினார்கள். அவற்றை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டு அவர்களிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு மாலை ஐந்தே முக்கால் மணிக்குப் புறப்பட்டு இரவு ஏழே முக்காலுக்கு உடுப்பி வந்துசேர்ந்தோம். (தொடரும்)

# இளமையில் கல்

(சுவாமி துருவானந்தர்)

சுற்றுலா சென்று கொண்டிருந்த பஸ் ஒன்று பள்ளி மாணவர்களைச் சுமந்து கொண்டு ஒரு முக்கிய வீதியின் வழியாகச் சென்று கொண்டிருந்தது. பஸ்ஸிலிருந்த மாணவர்கள் தலையை நீட்டியும், கையை ஆட்டியும் காட்சி களைக் கண்டு ரசித்த வண்ணமிருந்தனர். 'படார்' என்று எங்கேயோ இருந்து வந்த கல் ஒன்று பஸ்ஸின் முகப்புக் கண்ணாடியை நொறுக்கி விட்டு உள்ளே விழுந்தது. உள்ளே விழுந்த கல் பஸ் டிரைவரின் தலையைப் பதம் பார்த்து விட்டது. இரத்தம் குபுகுபு வென்று வழிந்து ஓடியது. க்ஷண நேரத்தில் அந்தப் பஸ்ஸில் ஒரே அமளிதுமளி ஏற்பட்டு விட்டது. அனுபவமிக்க மாணவர்களும், ஆசிரியரும் முதலுதவி செய்து பேருந்து ஓட்டுநருக்கு நிவாரணம் அளித்தனர். ஆனந்தமாக ஆடிப் பாடிக் கொண்டிருந்த அனைத்து மாணவர் களின் முகத்திலும் சோகம் படர்ந்திருந்தது. பஸ்ஸை நிறுத்திய டிரைவர் பஸ்ஸை விட்டு இறங்கிக் கல் வந்த திசையை நோக்கி வேக மாகச் சென்று அங்கிருந்தவர்களிடம் விசாரித் தார். அங்கு ஸ்டிரைக்கோ, கலவரமோ எது வும் நடக்கவில்லை யென்பதை அறிந்துகொண் டார். சில மாணவர்களோடு இன்னும் சற்று தூரம் போன பிறகு சிறுவர்கள் ஒரு ஆலமரத் தைச் சுற்றிக் கும்பல் போட்டிருந்தனர். அங்கு நடந்த நிகழ்ச்சியைப் பார்த்ததும் அவ ரைத் தாக்கிய கல் அங்கிருந்தவர்கள் மூலம் தான் வந்திருக்கக்கூடும் என யூகித்தார். ஆல மரத்தில் சிக்கிய பந்தை விடுவிப்பதற்காக அவர்கள் சிறிதும் பெரிதுமான கற்களை மரத் தின்மீது வீசி எறிந்த வண்ணமிருந்தனர். சிறு வர்களை அழைத்து அவர்களின் விளையாட் டால் நேர்ந்த விபரீதத்தை எடுத்து விளக்கி ஞர் ஆசிரியர். அறியாச் சிறுவர்களும் தங்க ளது அசட்டுத்தனத்தை உணர்ந்து மன்னிப்புக் கோரிச் சென்றனர். பஸ்ஸில் உள்ள மாணவர் களுக்கு விளையாடின சிறுவர்கள் மீது கோபம் கோபமாக வந்தது. அவற்றை அறிந்த ஆசிரி யர் டிரைவரைக் கூப்பிட்டுப் பஸ்ஸைக் கிளப் பச் சொன்னர். அந்தப் பஸ்ஸும், அந்த மாண வர்களைப் போன்று முணுமுணுத்த பாங்கில் இரைந்து கொண்டு சென்றது. 'உடைந்த கண்ணாடியை மாற்றிப் புதுப்பிக்கச் சில மணி நேரம் ஆகும். ஆனல் உடலில் ஏற்பட்ட காயம் குணம் ஆக எத்தனை நாள் ஆகுமோ? காட்டில் திரிபவைகளெல்லாம் நாட்டில் வந்து பிறந்து நமக்கு உபத்திரவம் தருகின்றன' என்று தமக்குள் பேசிக்கொண்டே வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தார் ஓட்டுநர். சில மணிகள் சென் றன. திடீரென்று வண்டி நின்றது. புகை வண்டி நிலையம் அருகே கதவு மூடப்பட்டிருந்த தால் அந்த வழியே சென்ற வாகனங்கள் யாவும் நிறுத்தப்பட்டிருந்தன. வண்டிகள் நின்ற காரணத்தை அறிய விரும்பினர்கள் மாணவர்கள். அந்த வழியே வந்த முறுக்கு விற்கும் கிழவி அம்மாள் நடந்த சம்பவத்தை விளக்கினள். 'யாரோ பாவிங்க தண்ட வாளத்திலுள்ள புஷ் பிளேட்டை எடுத் திட்டாங்க. இதைப் பார்த்த ஒரு பள்ளிக் கூடத்துப் பிள்ளை சிவப்புக் கொடி காட்டி அப்போது வந்த ரயிலை நிறுத்தி அத்தனை பேரையும் காப்பாத்துச்சு. புஷ் பிளேட்டைப் பிடுங்கி எறிந்த துரோகிகளையும் போலீஸில் காட்டிக் கொடுத்துச்சு. அது தெய்வப் பிள்ளைங்க! அந்தப் பிள்ளையைப்பெற்ற மகராசி சுகமாவாழணும்' என்று மனதாரப் புகழாரம் சூட்டினள். சிறிது நேரம் கழித்துப் பஸ் புறப் பட்டது. சற்று நேரத்திற்கு முன்புதான் பஸ் கண்ணாடியை உடைத்து என் தலைக்கும் பெரிய காயத்தை உண்டு பண்ணினன் ஒரு சிறுவன். ஆனல் இங்கோ நூற்றுக்கணக்கான உயி ரைக் காப்பாற்றி இலட்சக் கணக்கான ரூபாய் சேதத்தையும் தவிர்த்தான் மற்றொரு சிறுவன். மனதின் போக்கை எங்ஙனம் அறிய முடிய வில்லையோ அதேபோன்று இந்த மாணவர் களின் போக்கையும் புரிந்துகொள்ள முடிய வில்லை என்று பேசிக்கொண்டு வந்த டிரைவர் பக்கத்திலிருந்த ஆசிரியரைப்பார்த்துக்கேள்வி ஒன்று கேட்டார். "ஒரு சிறுவன் மேலானவனு கவோ கீழானவனுகவோ வருவதற்குக்காரணம் என்னஅய்யா?" என்றார். "தாய்தந்தையரிடத்

திலிருந்தும் மற்றவர்களிடத்திலிருந்தும் பெறுகிற பயிற்சியும், பண்பும்தான் காரணம்'' என்றார் ஆசிரியர். 'அதெப்படி? வெறும் பயிற்சியும் பண்புமே ஆளை மாற்றிவிடுமா?' என்றார் டிரைவர். மற்ற மாணவர்களும் டிரைவர் கட்சியில் சேர்ந்து கொண்டனர். இப்பொழுது நான் கூறுவதை நன்கு கவனித்துக் கேளுங்கள்'' என்று கூற ஆரம்பித்தார் ஆசிரியர்.

''பெருமைக்கும் ஏனைச்சிறுமைக்கும் தத் தம் கருமமே கட்டளைக் கல்'' என்றார் வள்ளுவர். சிறுவன் ஒருவன் எண்ணத்தால், சொல்லால், செயலால் நல்ல பழக்கவழக்கங்களில் ஈடுபட்டு வந்தானாகில் அவன் நல்லவனாக வரமுடியும். தீய பழக்கவழக்கங்களில் ஈடுபட்டிருக்கும் சிறுவர்கள் தீயவர்களாகத்தான் வரமுடியும். எப்படி என்றால் திருட்டுச் செயலில் முதலில் ஒருவன் ஈடுபடுகிறான். அப்போது பயமும், நடுக்கமும், தலையெடுக்கின்றன. அவன் திருடிப் பழகிவிட்டால் அப்பழக்கத்திற்கு ஏற்ப அவன் மனம் மாறியமைகிறது. பிறகு திருடுவதற்குப் பயப்படுவது இல்லை. சதாபொய்பேசிப் பழகியவனுக்கு உண்மை பேச அவன் மனம் இடம்தருவதில்லை.அதைத் தவறு என்று எண்ணக்கூட அது இடம் தருவதில்லை. மகாத்மா காந்தியடிகள் சிறுவனாக இருந்தபொழுது ஹரிச்சந்திரன் நாடகம் பார்த்தார். தானும் ஹரிச்சந்திரனைப்போன்று சத்திய விரதனாக இருக்க விரும்பினார். சத்தியத்திற்காக அல்லல் பட்டு அழியாத புகழை எய்திய ஹரிச்சந்திரனை அவர் தமக்கு முன் மாதிரியாக வைத்துக்கொண்டார். சிரவணன் என்ற அந்தணச் சிறுவன் வயது முதிர்ந்த தாய் தந்தையர்க்குச் செய்யும் சேவையை நாடகத்தில் கண்டார் சிறுவனான காந்தி. நாடகத்தைப் பார்த்ததிலிருந்து சிரவணனைப் போன்று அவரும் தன் தாய்தந்தையரைத் தெய்வமாகக் கருதிச் சேவைகள்செய்தார். பெற்றோர்களுக்கு அங்ஙனம் செய்த பயிற்சியின் விளைவா.கத்தான் அவரால் மக்களுக்குச் சேவை செய்துமகாத்மா ஆக முடிந்தது. சிறுவயதில் எதையும் விளையாட்டுப் போன்றுசுலபமாகக் கற்றுக்கொள்ள முடியும். இள மனதில் போடுகிற கருத்துக்கள் பசுமரத்தாணி போன்று நன்கு பதிந்துவிடும். பிறகு இளமனதில் ஒரு விஷயம் நன்கு பதிந்துவிட்டால் ஆயுள் உள்ளளவும் அது மாறாது. விளையாட்டு வினையாகும் என்ற பழமொழியின் சரியான பொருள், விளையாட்டாகச் செய்கிற சிறுசெயல்கள் நாளடைவில் நம் மனத்தில் பழக்க வழக்கங்களாக மாறி மாபெரும் செயலாகப் பரிணமிக்கும் என்பதேயாம். சிறுவர்கள் உண்மையே பேசும் இயல்புடையவர்கள். அந்தப் பழக்கத்தை விடாது வளர்க்கப் பெற்றோரும் ஆசிரியரும் முயற்சி எடுக்கவேண்டும். சத்தியம் பேசுவதால் உண்டாகிற நலனைக் கதைகள் வாயிலாகச் சிறுவர் சிறுமியர்க்குப் புகட்டவேண்டும். சிறுவர்கள் பணிவிடை செய்யும்பொழுது அவர்கள் செயலைப் புகழவேண்டும்; தவற்றை இழித்துப் பேசக்கூடாது. சிறுவர்கள் பள்ளிக்கூடம் சென்று படிப்பதைவிடச் சுறுசுறுப்பாக இருந்து வேலை செய்ய விரும்புவதை நாம் காணலாம். பிறரைப் பார்த்துத்தாங்களும் அவர்கள் போன்று இருக்க வேண்டும் என்று எண்ணுவது சிறுவர் சிறுமியர் எல்லார்க்கும் இருக்கும் பொதுவான பண்பு. பள்ளி விடுதியில் காலையில் நான்கு மணிக்கு எழுந்திருக்கும் சிறுவன் வீட்டிற்குச் சென்றவுடன் காலை ஏழு மணிக்கு எழுந்திருப்பானால் அப்பழக்கம் பெற்றோரைப் பார்த்துத் தெரிந்துகொள்ளும் பழக்கமாகும். நல்ல வார்த்தைகளை விட்டுவிட்டுத் தீய வார்த்தைகளைப் பேசக் கற்றுக்கொள்வதும் பிறரைப் பார்த்துத்தான். ஆகவே, சிறுவர் சிறுமியர்களை வளர்ப்பது ஒரு பெரிய பொறுப்பு என்பது அதன் உண்மைநிலை உணர்ந்தவர்களுக்குத்தான் தெரியும். பெற்றோர்கள் அதிகாலையில் படுக்கையைவிட்டு எழுந்தவுடன் ரேடியோ பாட்டுக் கேட்பதையும், பத்திரிகை படிப்பதையும் விட்டுவிட்டுக் குழந்தைகளை அருகில் அமர்த்தித் தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, கீதை போன்ற பாசுரங்களைப் பாடித் தாங்களும் இன்புறலாம். பிஞ்சுள்ளங்களில் பக்தி உணர்வை ஊட்டலாம். இதில் இன்புற்றுச் சுவைகண்ட மனது அருவருக்கத்தக்க சினிமாப் பாடல்களைக் கேட்கவோ, ஆபாசம் நிறைந்த அரசியல் செய்தியைப் பத்திரிகையில் காணவோ விரும்பாது. கள்ளாமை அல்லது பிறர்பொருளைத் திருடாமை ஒரு சிறந்த

பண்பு. பிறர் உடைமைகளைத் திருடாதே என்று வெறுமனே கூறுவதைவிடத் திருடினால் என்ன நிகழும்? என்பதை அவர்கள் உணரச் செய்ய வேண்டும். வீட்டில்சிறுசிறு பொருளைத் திருடிப் பழகியவன் வெளியிடங்களிலும், திருடத் தான் செய்வான். 'களவு அழகைக்கெடுக்கும்' என்ற பழமொழியை அவர்களுக்குப் புகட்டித் திருடும் மனப்பான்மை போய் பிறர் உடைமை கள் கீழே கிடந்தாலும் அவற்றை உடையவரி டம் சேர்ப்பிக்கும் நல்ல பழக்க வழக்கங்களைப் பெற்றோர்களும், மற்றவர்களும் வளர்க்க வேண்டும். உண்மை உள்ள இடத்தில் திருட்டு இருக்காது. நாள்தோறும் நல்லவர்களோடு சகவாசம் வைத்து, நல்லவைகளையே பேசி நல்ல பழக்கத்தைக் கடைப்பிடிக்கும் சிறுவர் சிறுமியர்கள் நல்லவர்களாகவே உருவா வார்கள்''. இங்ஙனம் ஆசிரியர் கூறிமுடித் தார்.

---

## ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சி

தட்சிணேசுவரத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தங்கி இருக்கும் அறை! அறைக்கு வட கிழக்குப் பக்கமாக வராண்டா ஒன்று! அங்கிருந்து சற்றேறக்குறைய இருபது கஜ தூரத்தில் நவநாகரிக வசதிகளுடன் கூடிய விருந்தினர் விடுதி! குறிப்பாக, மதுரநாதரோ, ராணி யம்மையாரோ கோவிலுக்கு வரும்பொழுது ஓய்வு எடுத்துச் செல்வதற்காகக் கட்டப்பட்டது. ஒரு நாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் வராண்டாவில் மெல்ல உலாவிக் கொண்டிருந்தார். அவருடைய பார்வை எதிலும் நிலைத்திராத நிலையில், மனது பேரின்ப வெள்ளத்தில் நீந்திக் கொண்டிருந்தது. அன்றைய தினம் கோவிலைப் பார்வையிட வந்திருந்த மதுரநாதர் விருந்தினர் விடுதியில் ஓய் வெடுத்துக் கொண்டிருந்தார். இன்னும் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்க்கை அவருக்குப் புரியாத புதிராகவே இருந்தது. சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டு வெளியே நோக்கிய வரின் கண்களில்—தன்னிலை மறந்து உலாவும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தென்பட்டார். ஆழ்ந்த சிந்தனையுடன் அவரையே பார்த்துக் கொண்டிருந்த மதுரநாதர் திடுதிப்பென்று எழுந்து ஓடத் தொடங்கினார். விரைந்து ஓடியவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கதறி அழத் தொடங்கினர். ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு நிலைமையைப் புரிந்து கொள்ள சிறிது நேரம் பிடித்தது. மதுரநாதரின் உண்மை நிலைமை விளங்காத அவர், ''மதுர்பாபு, இது என்ன விளையாட்டுத்தனம். நீ ஒரு பெரிய மனிதன்—அதுவும் ராணியின் மருமகன்—பார்ப்பவர் கள் என்னைப்பற்றியும், உன்னைப்பற்றியும் என்ன நினைப்பார்கள்? எழுந்திரு......விஷயத்தை விளக்கு''—என்று ஆறுதல் கூறினர். மெல்ல மெல்லச் சுயநினைவு பெற்ற மதுரநாதர் கண்களில் நீர் வழியப் பயபக்தியுடன் சொல்லத் தொடங்கினர்: ''தந்தையே, நான் கண்டது சாதாரண காட்சியன்று, தெய்விகக் காட்சி. உலாவிக் கொண்டிருந்த உங்களைப் பார்த்த எனக்கு நீங்கள் திடீரென்று காளியாகவும் பின்பு மகேஸ்வரராகவும் மாறினீர்கள். கண்களில் ஏதாவது கோளாறோ என்று நினைத்துக்கொண்டு கண்களை நன்றாகக் கசக்கிப் பார்த்தேன். அப்பொழு தும் அதே காட்சி. பலமுறை முயன்றும் மறுபடியும் மறுபடியும் அதே காட்சி''என்று கூறிமுடித் தார். நிதானமாகப் பதிலளித்தார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். ''மதுரநாதரே, இந்த நிகழ்ச்சி எப்படி நடந்தது; எவ்வாறு நடந்தது? என்பது எனக்குத் தெரியாது. மனக்கவலை நீங்கி, இறைவனின் திருக்கருணையை எண்ணி மனமகிழ்வுடன் இருங்கள்'' என்று கூறி அவரைத் தேற்றினர். அந்நிலையிலும் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாத ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஆன்மீக பலத்தை என்னென்று உரைப்பது!!

---

# செய்திகள்

**நிகழ்வது:**

*1978 ஆம் வருஷம் மார்ச்சு மாதம் 14, 15, 16 (செவ்வாய், புதன், வியாழன்) ஆகிய தேதி களில் மூன்று நாட்கள் அந்தர்யோகம் தபோ வனத்தில் நிகழும்.*

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம்-மூன்றும் பதிப்பு பிரசார விலை | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரெண்டாம் பதிப்பு பிரசார விலை | ... 12-00 |
| ஞானயோக விளக்கம் | ... 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... 8-00 |
| கர்மயோக விளக்கம் | ... 7-00 |
| பக்தியோக விளக்கம் | ... 6-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... 6-00 |
| விவேகானந்த விவரணம் | ... 4-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | ... 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... 3-50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ ஆரும் பதிப்பு-பிரசார விலை | ... 2-75 |
| தினசரி தியானம்-பதினான்காம் பதிப்பு (பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை | ... 2-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... 2-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... 2-00 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | ... 2-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... 2-00 |
| **தாயுமானவர் இயற்றிய** | |
| பரிபூரணானந்தம் விரிவுரை | ... 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை | ... 3-00 |
| சுகவாரி ஷை | ... 3-00 |
| கருணாகரக்கடவுள் ஷை | ... 2-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... 1-50 |
| பரசிவ வணக்கம் ஷை | ... 0-50 |
| விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) | ... 1-50 |
| பஜனைப் பாடல்கள் | ... 1-50 |
| சந்நியாசி | ... 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... 1-00 |
| இராவண தத்துவம் | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... 1-00 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... 1-00 |
| காயத்ரீ | ... 1-00 |
| வாலிமோக்ஷம் (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... 1-00 |
| அறம் வளர்த்த நம்பி | ... 0-95 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-80 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... 0-80 |
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ரூ. 0-80 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-75 |
| இறை வணக்கம் | ... 0-75 |
| *ஆத்ம சக்தி | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ...0-75 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... 0-70 |
| *சக்தி தத்துவம் | ... 0-70 |
| *சிவ தத்துவம் | ... 0-70 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-60 |
| *ஆலய வழிபாடு | ... 0-60 |
| சைவன் யார்? | ... 0-50 |
| *சூரிய நாராயணன் | ... 0-50 |
| *முருகக் கடவுள் | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-50 |
| தெய்வீக மகிமைகள் | ... 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | ...0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... 0-40 |
| *கணபதி | ... 0-40 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... 0-40 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... 0-30 |
| பரசுராமர் கர்வ பங்கம் (நாடகம்) | ... 0-15 |
| The Bhagavad Gita (9th Imp.) | ... 15-00 |
| The Indian National Education | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ...8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 8-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... 5-00 |
| Daily Divine Digest (with plastic-cover) | ... 4-20 |
| Mahabharata (with plastic cover) | ... 4-50 |
| Ramayana (do) | ... 4-00 |
| The Man Making Message of Vivekananda (with plastic cover) | ... 3-00 |
| The Bhagavad Gita (Small Size) (With plastic cover) | ... 3-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... 2-50 |
| Holy Bible—In the Light of Vedanta | ... 1-50 |
| *Introducing the Gita | ... 1-50 |
| *Key to Higher Life | ... 0-75 |
| *The Teacher | ... 0-60 |
| *The Student | ... 0-45 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை-639 115, திருச்சி Dt.

## DHARMA CHAKRAM

*Statement about ownership and other particulars about Newspaper 'Dharma Chakram' to be published in the first issue every year after the last day of February.*

FORM IV

( See Rule 8 )

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication : | Tirupparaitturai |
| 2. | Periodicity of its Publication : | Monthly |
| 3. | Printer's name : | Swami Yogananda |
| | Nationality : | Indian |
| | Address : | Tapovanam Printing School, Tirupparaitturai-639115, Tiruchi Dt. |
| 4. | Publisher's name : | Swami Yogananda |
| | Nationality : | Indian |
| | Address : | Sri Ramakrishna Tapovanam, Tirupparaitturai-639115, Tiruchi Dt. |
| 5. | Editor's name : | Swami Nithyananda |
| | Nationality : | Indian |
| | Address : | Sri Ramakrishna Tapovanam, Tirupparaitturai-639115, Tiruchi Dt. |
| 6. | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital : | Sri Ramakrishna Tapovanam. Tirupparaitturai-639115, Tiruchi Dt. |

*I, Yogananda, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

Yogananda
Signature of the publisher

Date: 14—3—78

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.